அங்கீகரிக்கப்பட்டுப் போனாலும், ஸர்க்காருக்கு அவைகளை அமுலுக்குக் கொண்டுவராதபடி நிறுத்திவைக்க அதிகாரம் மாத்திரம் இருந்து வந்தது.

ஆகவே, இந்தியாவில் ஆங்கில அரசாக்ஷி தொடங்கின நாள் முதலாய், இந்திய அரசாக்ஷி படிப்படியாய் நான்கு முக்கியமாயுள்ள ஸ்திதிகளை அடைந்து வந்து, ஒவ்வொரு ஸ்திதியினின்றும் அடுத்த ஸ்திதிக்கு அநுகூலமாயுள்ள சீர்திருத்தங்கள் ஏற்பட வழிகாட்டி வித்து, அச்சீர்திருத்தங்கள் அநுஷ்டானத்திற்கு வரப்பெற்று, அப்படியே படிப்படியாய் புதிது புதிதாய் சீர்திருத்தங்கள் வருஷா வருஷமும் மேலிட்டு வந்திருக்கின்றன என்பது உங்களுக்கு இப்பொழுது விசதமாகும்.

அந்த நான்கு ஸ்திதிகளில் நீங்கள் முக்கியமாய் ஐயமதிரிபு அறக் கவனிக்கவேண்டிய விஷயங்களாவன —

**முதலாவது ஸ்திதி** — இந்தியர்களுக்கு ஏற்பட்ட சட்ட திட்டங்கள் ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களாலேதான் செய்யப்பட்டன. அவ்வுத்தியோகஸ்தர்களும் ஆங்கிலரே. அவர்களில் ஒருவர்கூட இந்தியர் இல்லை.

**இரண்டாவது ஸ்திதி** — இந்தியாவில் சட்டங்கள் ஆங்கிலேய ஸர்க்கார் உத்தியோகஸ்தர் பலராலும் உத்தியோக முறைமை இராத சிலராலும் செய்யப்பட்டன. அவ்வுத்தியோக முறைமையில் இராதவர் சட்டம் செய்யும் நிமித்தமாய் ஸர்க்காராலே நேமிக்கப்பட்டவர்கள். இங்ஙனம் நேமிக்கப்பட்டவர்களில் இந்தியர்கள் வெகு சொற்பம்.

**மூன்றாவது ஸ்திதி** — மேல்சொல்லப்பட்ட இரண்டு ஸ்திதிகளிலும் இந்தியாவிலுள்ள சட்ட நிர்மாண சபைகள், சட்டங்கள் மாத்திரம் உண்டாக்க ஏற்பட்டிருந்தனவே தவிர, இந்தியாவைக்குறித்த வரவு செலவு திட்டங்களைப் பரிசீலனைசெய்து பார்க்கவும், இந்திய அரசாக்ஷியைக்குறித்து ஸர்க்காரைக் கேள்வி கேட்பதற்கு உள்ள உரிமை ஒன்றும் இராமலிருந்தன. இந்த மூன்றாம் ஸ்திதியில் இவ்விரண்டு உரிமைகளும் வெகு கொஞ்சமாய் கிடைத்தன. தவிரவும் ஸர்க்காரால் சட்ட நிர்மாண சபைக்கு அங்கத்தினராக (மெம்பராக) இதுவரையில் நியமிக்கப்பட்ட ஸர்க்கார் உத்தியோகமில்லாதவரும், ஸர்க்கார் இஷ்டப்படி நேமிக்கப்படாமல், ஜனங்களுடைய சில ஸமூகங்களாலே தேர்ந்தெடுக்கப்பட்டவர்களிலிருந்துதான், ஸர்க்கார் இது முதல்கொண்டு அவர்களை நியமிக்கலாயிற்று. ஆகவே இது முதல் தான் ஜனங்களுக்கு, தங்களுக்கு ராஜாங்க விஷயமாய் சட்ட சபைக்கு மெம்பர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு மூலஸாதனமாயுள்ள உரிமை கிடைத்தது.

**நான்காம் ஸ்திதி** — இந்த ஸ்திதியில்தான் இந்தியா கவர்ன்மெண்டு நிர்வாக ஸபையிலும், ஒவ்வொரு மாகாண அரசாக்ஷி நிர்வாக சபையிலும், ஒவ்வொரு இந்தியரும் நியமிக்கலாயினர். ஸர்க்கார் ராஜாங்க ஸம்பந்தமாய் செய்யும் விஷயங்களை ஜனங்கள் ஆராய்ந்து பார்த்து அறிய உரிமை கிடைத்ததும் இப்பொழுதுதான். மாகாணச் சட்ட சபைகளிலும் ஸர்க்கார் உத்தியோகஸ்தர்கள் மெஜாரிடியிலிருந்து வந்தது போய், காலம் சென்ற கோபால கிருஷ்ணகோகலே போல் பேர் பெற்ற இந்திய பிரபுக்கள் ராஜாங்க

விஷயங்களைப் பற்றிப் பரிசீலனை செய்யவும், ராஜாங்கத்திற்கு அநுகுணமாய் தங்கள் மனதில் உள்ளவைகளைத் தாராளமாய் வெளியிட்டு, தங்கள் அபிப்பிராயங்களைச் சட்ட சபைகளில் எடுத்துச்சொல்லவும் இடம் உண்டாயிற்று. இதுமாத்திரமல்ல இச்சட்ட நிர்மாண ஸபைகளுக்கு மெம்பர்களாக ஜனங்களே தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்கு அநுகுணமாக இந்தியாவில் ஒவ்வொரு மாகாணமும் சில சில தொகுதிகளாய்ப் பிரிக்கப்பட்டது.

ஆகவே, இங்கிலீஷ் ராஜாங்கமுறை, சுமார் 150 ஆண்டுகளுக்கு முன் இந்தியாவில் ஈஸ்டு இந்திய வர்த்தக கம்பெனியாரால் ஏற்படுத்தப்பட்டிருந்த மூலாதாரச் சட்டத்தைத் தழுவி ஜனங்கள் யாவருக்கும் ராஜாங்கத்தில் ஒன்றுபோல சட்டம் நடைபெறவேண்டும் என்கிற ஸந்நிதியிலிருந்து படிப்படியாய் தற்காலம் வரையில், முன்னுக்கு வந்துகொண்டேயிருக்கிறதல்லவா? ஜனங்களுக்கும் படிப்படியாய் தங்கள் ராஜ்ஜியத்தைத் தாங்களே பரித்து ஆளும்படியான இடமும் கிடைத்திருக்கிறதல்லவா? ஒவ்வொரு ஸந்நிதியிலும், இந்திய ராஜாங்க விஷயமாய் பாடுபட்டு உழைத்த இந்திய சிரேஷ்டர்கள் ராஜீய விஷயங்களில் தாங்கள் வேண்டிக் கேட்ட உரிமைகளும் அதிகரித்து, அவைகளும் கைகூடி வந்தன அல்லவா? காலம் செல்லச்செல்ல, கவர்ன்மெண்டார், ராஜாங்க விஷயமாய்ச் செய்யும் காரியங்களில் குற்றம் குறைகள் கண்டுபிடித்து, ஸர்க்காரைத் திருத்திக்கொண்டுவர ஜனங்களுக்கு ஊக்கமும் அதிகரித்து வந்திருக்கிறதல்லவா? தற்காலம் கிடைத்துள்ள நூதனச் சீர்திருத்த விஷயமாய் ஏற்பட்டிருக்கும் ரிபோர்ட்டிலிருந்து தெரியவருவதாவது ராஜாங்க ஸம்பந்தமாய் இந்தியர்கள் அடிக்கடி வற்புறுத்திக் கேட்டுக்கொண்டபடியே, இந்திய அரசாக்ஷி ஏற்பட்டு, இந்தியர்களே ஸ்வராஜ்ஜியாதிபத்தியம் வகித்து, இந்தியாவிற்கு எது அநுகூலமோ அப்படி இந்திய ராஜாங்கம் நடைபெறச் செய்வதுதான் இந்தியர்களின் கோரிக்கை அப்படிக்குக்கிடைத்திருக்கும் ஸ்வாதந்திரியம் எங்கும் பரவி, யாவராலும் எடுத்துப்பேசப்பட்டுவிருக்கிறது.

சென்ற 1914-ம் வருஷம் ஆகஸ்டுமாதம், உலகத்தில் உண்டாகிய யுத்தம் இந்தியர்கள் ஸ்வராஜ்ஜிய விஷயமாய்க் கோரிக்கொண்டதற்கு வேறொரு வகை வீரியத்தையும் கொடுத்துவிட்டது. தவிரவும் இந்திய ஜனங்களும், இந்திய அரசர்களும், ஆங்கில மன்னராகிய தங்கள் சக்கிரவர்த்தியாருக்கு, தங்கள் பணிவையும் அபிமானத்தையும் வெளிப்படுத்திக்காட்ட அந்த மகாயுத்தமே இடமாயிற்று. ஆகவே, இத்தியாதி காரணம்பற்றி, இந்தியர்களும் ஆங்கிலேயர்களைப் போலவே, ஆங்கில ராஜாங்கத்திற்கு அங்கத்தினர் என்றும், அவர்களுக்கு ஸ்வராஜ்ஜியாதிபத்தியம் படிப்படியாய்க் கிடைக்கவேண்டுவது ஆவசியம் என்றும், அங்ஙனம் படிப்படியாய் ஸ்வராஜ்ஜியாதிபத்தியம் அதிகரித்து, கடைசியில் ஸம்பூரணமாய், இந்திய அரசாக்ஷி முழுவதையும் இந்தியர்களுக்கே கொடுத்துவிடவேண்டியது என்றும், இப்பொழுது ஏற்படுத்தப்பட்டிருக்கும் நூதனச் சீர்திருத்தங்களால் உண்டாகி, மேற்சொல்லிய கோரிக்கைகள் சரிவர நடந்தேறி முடிவுபெற, இச்சீர்திருத்தங்களே தகுந்த ஜாமீன்போல தலைகாக்கின்றன.

## 4-ம் அத்தியாயம்.

### ஒரு ஜகப்பிரஸ்தமான விளம்பரம்

இந்தியர்கள் ஸ்வராஜ்ஜியாதிபத்தியம் வகிக்க மூலாதாரமாயுள்ள நூதனச் சீர்திருத்தங்கள் ஏற்படும் விஷயமாய், சென்ற ஐந்து வருடங்களில் என்ன என்ன காரியங்கள் நடந்தேறின என்பதை இப்பொழுது நாம் கவனிக்கவேண்டியது அவசியம் இக்காரியங்களே இந்திய தேசத்துச் சரித்திரத்தைச் சீரோங்கி விளங்கச்செய்பவைகள் இவைகளே, இங்கிலாந்திற்கும் இந்தியாவுக்கும் ஏற்கனவே இருந்த அன்னியோன்னிய பாவத்தை அதிகப்படுத்த, நூதன ஸாதனங்களானவை இக்காரியங்களால்தான் இவ்விரண்டு ராஜ்ஜியங்களும் ஒன்றுக்கொன்று அண்ணன் தம்பிபோல மித்திரபாவமடைந்து, ஸகாயம்செய்துகொள்ள இடங்கொடுத்திருப்பவைகள் இவைகளே, ஆங்கில அரசாக்ஷியில் இந்தியா எங்ஙனம் ஊக்கமடைந்து மேனோக்கி வருகிறது என்பதை வெளிப்படுத்தக்கூடியவைகள்

1914-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் முதல் 1918-ம் வருஷம் நவம்பர் மாதம் வரையில் ஜகப்பிரஸ்தமாய் நடந்த மகாயுத்தம் உங்களுக்குத் தெரியாத விஷயமல்லவே அந்த மகா யுத்தத்தில் இங்கிலீஷ்க்காரர், பிரான்சு தேசத்தவரோடும், தங்களோடு ஐக்கிய பாவமாயுள்ள இதர தேசஸ்தர்களோடும் ஒருங்குசேர்ந்து, ஜர்மானியரைத் தோற்கடித்து, அவர்களுக்குள்ள மமதையை அடக்கி, அவர்கள் வீராவேசத்தையும் சிதைத்துவிட்டனர் இங்கிலீஷ்காரர்கள், பெல்ஜியத்தார்போல ஆதரவு அற்ற, துர்பலமாயுள்ள தேசஸ்தர்களைக் காப்பாற்றும்பொருட்டு, ஜர்மானியரோடு போர்புரியத் தலைப்பட்டனர். ஜர்மானியர் ஏற்கனவே ஏற்பட்டிருந்த உடன்படிக்கைகளை நிராகரித்து, பெல்ஜிய தேசத்தார் செய்த ஆக்ஷேபணைக்கும் இடங்கொடாமல், முறை பிறண்டு பெல்ஜியத்திற்குள் தங்கள் ராணுவங்களோடு பிரவேசித்து, அங்கிருந்து பிரான்ஸையும் இங்கிலாந்தையும் படை எடுத்து வசப்படுத்திக்கொள்ள ஆயத்தப்பட்டிருந்தனர் ஜர்மானியருக்குத் தங்களுக்குள்ள சௌகரியத்தினால் மமதைமேலிட்டு, இதர தேசஸ்தர்களுடைய சுயேச்சையையும், அவர்கள் ஆளுகையையும், உரிமைகளையும் பங்கப்படுத்தி, அவர்களை உபத்திரவிக்கத் தலைப்பட்டு, தங்கள் தங்கள் காரியங்களை அமரிக்கையாய் நடத்திவராமலிருக்கும்படிக்குள்ள செய்கைகளைச் செய்ய முயன்றனர் ஆகையினால்தான், ஆங்கிலேயர்கள், தங்கள் மித்திரர்களுக்குக் கஷ்டம் உண்டாகாவண்ணம், அவர்களைக்காப்பாற்றும் பொருட்டு, லோக ஸம்ரக்ஷண நிமித்தமாயும், உலகத்தில் நாகரீகம் என்பது சிதைவடையாமல் காப்பாற்றும் நிமித்தமாயும், ஜர்மானியரோடு சண்டைசெய்ய நேர்ந்தது. அங்ஙனம் ஆங்கிலர் போர்புரியத் தயாரானபோது மாக்ஷிமைதங்கிய நமது சக்கிரவர்த்தியாகிய ஜியார்ஜ் மன்னவர், ஒரு பிரகடனப் பத்திரிகை பிறப்பித்து, அதன் மூலமாய்

இந்திய மகாஜனங்களுக்கும் இந்திய அரசர்களுக்கும் இந்த மகாயுத்தத்தில் நீங்கள் யாவரும் ஆங்கில அரசாக்ஷியில் பக்தியுள்ளவர்களாய், உங்களுக்குள்ள ராஜ விசுவாஸத்தை மேற்கொண்டு, ஆங்கிலர் பக்ஷமாக நின்று, ஜர்மானியரோடு போர்புரியவேண்டிய உபகரணங்களை நீங்கள் ஸகாயஞ்செய்து, ஆங்கிலர் வெற்றிபெற்று, ஆங்கில அரசாக்ஷி சிரோங்கி விளங்கச்செய்யவேண்டும் என்று சொல்லிக் கேட்டுக்கொண்டனர். இந்திய மகாஜனங்களும் இந்திய மன்னர்களும், தங்கள் சக்கிரவர்த்தியார் பிரேரேபித்த அபிப்பிராயங்களைச் சிரமேற்கொண்டு, அவர் பக்கமே வெகு பக்தி சிரத்தையுடன் நின்று, போர்புரிவதற்கு இந்தியர்களில் அநேகரை ஏராளமாய் ஸைனியத்தில் சேரச்செய்து, சண்டைக்காக ஏற்படுத்தப்பட்ட பண்டுக்கு தாராளமாய் திரவிய ஸகாயம் பண்ணினதும் தவிர, இன்னும் பலவிதமாயும் ஆங்கிலர் யுத்தத்தில் வெற்றிபெற்று, ஜயபேரி கொட்டவேண்டிய உதவியும்புரிந்து வந்தனர். அக்காலத்தில் ஹார்டிஞ்சு பிரபு இந்தியாவில் வைஸிராயாக இருந்தவர். அவர் இந்திய சிப்பாய்களை பிரான்சு தேசத்தில் போர்முனைக்கு அனுப்பி வித்தனர். அங்ஙனம் அவர் அனுப்பியது, இந்தியர்கள் நன்மைக்காக, வெகு புத்தி சாதுரியத்துடன் செய்யப்பட்டதாகும். அதினால் இந்தியர்களுக்கும் இங்கிலீஷ்காரருக்கும் மனது இளகி உருகும்படியாயும் ஆயிற்று. அதுதான் இந்தியாவை வெகு சீக்கிரம் முன்னுக்குக் கொண்டுவரலாயிற்று. அங்ஙனம் அனுப்பப்பட்ட இந்திய போர்வீரர்கள் ஐரோப்பாவில் ஆங்கில வீரர்களோடுசேர்ந்து, ஜர்மானிய ஸைனியத்தோடு நேருக்கு நேர் போர்புரியலாயினர். அவ்விந்தியப்போர்வீரர்களும், இந்தியாவிலுள்ள பஞ்சாபியர், மகாராஷ்டிரர், மகம்மதியர், ஸீக்கியர், ரஜபுத்திரர், ஜாட்ஜாதியார், கூர்க்கர் முதலிய போர்புரியும் ஆண்மைத்தன்மையுள்ள ஜாதியார்களிலிருந்து பொறுக்கி எடுத்து அனுப்பப்பட்டவர்கள். இவர்கள் மாத்திரம் அல்ல இந்தியாவிலிருந்து அநேகம் அரசர்களும் ஸைனியத்தில் போர்வீரர்களாய்ச் சேர்ந்து போர் முகத்திற்குப்போய் யுத்தம் செய்தனர். இந்த யுத்தகளத்தில் இந்தியப் போர்வீரர்களுடைய ஆண்மையும், அவர்கள் செய்துகாட்டிய காரியங்களும், அவர்கள் வெளியிட்ட ராஜ பக்தி விசுவாஸமும், ஆங்கிலருக்காக அவர்களில் அநேகர் பலிபோலாகி வீர ஸ்வர்க்கம் போனதும், அவர்களுடைய பலபராக்கிரமும், எள்ளளவும் பின்வாங்காமல் கஷ்டங்களைப் பொறுத்து இருந்த அவர்கள் சக்தியும், தங்கள் உயிரையும் லக்ஷியம் செய்யாமல், தங்கள் மன்னவருக்கு தாங்கள் செய்ய வேண்டிய கடமைகளைச்செய்து காட்டிய திறமும் ஆகிய இந்தியர்களுக்குள்ள நல்ல குணங்கள் யாவும், இந்தியாவையும், இந்தியர்களையும் யாவரும் வியக்கும்படி கீர்த்தியை நாட்டலாயின. மேலும், இந்தியர்கள், தங்களுக்குள்ளேயே சண்டை சச்சரவு போட்டு, கலகம் உண்டாக்காமல், ராஜ்ஜியத்தில் ஐக்கிய பத்தியமாய் இருந்து மன்னவரிடம் தாங்கள் வைத்திருக்கும் பிரீதி விசுவாஸத்தை பகிரங்கமாய்க் காண்பித்ததும், அவர்களுக்குக்கிடைத்த கீர்த்தியை மேலோங்கி பிரகாசிக்கச் செய்தது. இத்தியாதி விஷயங்களாலே, இங்கிலீஷ் ராஜாங்கத்தார், தங்கள் நாட்டில் லண்டன் மாநகரில் யுத்த ஸம்பந்தமாய் நடைபெற்ற ஆலோசனை சபைக்கு, இந்தியாவி

விருநது பிரகயாதிபெறற இருவாகளைத தோநதெடுதது, அவாகளை இநதிய மகா ஜனஙகளுககுப பிரதிநிதியாகப பேசுமபடியாக நேமிததனா அவவிருவாகள, பிககனீா மகாராஜாவும, ஸா (ஸதயேநதிர) ஸிநஹா எனபவருமே. ஸிநஹா எனபவருககு கொஞசம நாளைககுள 'லாாடு' எனனும படடம வாயநதது, ஆஙகில நாடடிலுளள மகாபிரபுககளில அவா ஒருவராய நேமிககபபெறறு, ஹெளஸ ஆப லாாடஸ எனனும பாாலிமெணடு மகா ஸபையில ஒரு அஙகததினராய, இபபொழுது இநதிய ஸிகாடடரி ஆப ஸடேட எனபவருககு அடுததபடி உததியோகமும வகிதது விளஙகா நிறகிறாா இஙஙனம நம இநதியரில ஒருவருககு கிாததி வாயநதிருபபது நமககும நம ராஜஜியததிறகும மகிமையனறோ! இநதிய மகா ஜனஙகளும, இநதிய மனனாகளும இநத மகா யுததததில புரிநது வநத பேருதவியும, அவாகள காடடிய ராஜ பகதியும, இநதியாவை மேலோஙகசசெயதது, இஙகிலீஷ துரைததனததாருககும, இநதியாகளை தஙகள கீழபடியுளளவாகளாய மதிததிருநத எணணம முறறிலும மாறுபடடு, அவாகளைத தஙகள சகோதராகளபோல தஙகள ராஜஜியததிறகு அஙகததினாகளேயாகும எனறு மதிககலாய, அவாகள ஸவராஜஜியாதிபததியம வேணடும எனறு வெகுநாளாயக கோரிககொணடு வருவதை அவாகளுககு தாஙகள கொடுககக கடமைபபடடிருபபவாகள எனபதை ஆஙகில துரைததனததாா நனகுணரலாயிறறு. ஆனதுபறறி, இநதிய ஸிகாடடரி ஆப ஸடேட உததியோகம வகிககும மாணடேகு பிரபுவும, மாடசிமைதஙகிய ராஜாவுககாகவும, பாாலிமெணடு மகா ஸபையாருககாகவும, ஆஙகில மகா ஜனஙகளுககாகவும ஸாகஷி பூதமாய இருநது, 1917-ம வருஷம ஆகஸடுமாதம 17-ம தேதியில, ஹெளஸ ஆப காமமனஸ எனற மகா ஸபையில யாவரும எபபொழுதும ஞாபகததிலிருததும படியாய இநதியாவைக குறிதது ஒரு விளமபரம செயதனா அவவிளமபரததின முககியமாயுளள அமசஙகளை உஙகளுககுக கீழ வருமாறு சொலலுவேன அவையாவன —

(1) மாடசிமைதஙகிய நமது அரசருடைய ஆளுகையின தாதபரியமாவது ராஜஜிய பாரம வகிதது அரசாளுவதில ஒவவொரு அமசததிலும இநதியாகளை படிபபடியாயச சோதது வநது, அவாகள தாஙகளே ஆணடு வருமபடிககுளள ஏறபாடுகளை உணடாககி விருததிககு வருமபடி விடடு, கடைசியில தஙகள ராஜஜிய முழுவதையும தாஙகளே ஆணடுவநது, பிரஜைகளுககு உததரவாதம சொலலுமபடி அவாகளை படிபபடியாய கைதூககி விட வேணடும இநதியாவும அபபொழுது பிரிடடிஷ ராஜஜியததிறகு ஓா உபகரணமாகி, தன தாழமைநிலை போய, ஆஙகிலரும இநதியரும ஸமஸதிதியுடையவாகளாக வேணடும இநத அபிபபிராயததை இநதியா கவானமெனடாரும முறறிலும அநுவதிததவாகளே ஆனதுபறறி கூடிய சீககிரததில இநதியாகளுககு தஙகள ராஜஜியததைத தாஙகளே நிாவகிதது ராஜஜியபாரம வகிககப போதுமான மூலாதார ஏறபாடுகளை இநதியாகளுககுச செயது கொடுததுவிட வேணடுவது அததியாவசியம எனபதை நமது

சககிரவாததியாா கிராமாளிநதிருககிறா இதுதான ஸிககிரடரி ஆப ஸடேட பகிரஙகமாயச சொனன விளமபரததின முதல அமசம

(2) "மேல கணடபடி இநதியாகளை விருததிககுக கொணடு வர வேணடியது படிபபடியாய காலககிரமததில ஆகிவரவேண டும" எனபது இரணடாம அமசம

(3) "தறகாலததில இநதியபபிரஜைகள முனனுககு வநது ஸௌககியம பெறுவது இநதியா கவானமெனடாருடைய வசமிருபபதினுலே, அவவிநதிய கவானமெனடாரும, பிரிடடிஷ கவானமெணடாரும, இனிமேல இநதியாவின நனமைககாக உழைகக வருவாாகளின நறறுமையையும கூடடுறவையும நாடி, அவா களாலே எவவளவு வரைககும ராஜஜியபாரம வகிததுவரத திறமை உணடோ, எவவளவுககு உததிரவாதிகளாயிருபபாாகளோ அதை யும பரிசீலனை செயது, இநதியாகள முனனேறககிவா ஸவராஜஜி யாதிபததியம கொடுபடவேணடும" எனபது மூனறுவது அமசம

ஆகவே மேலே கூறியுளள விளமபரததில உளள மூனறு முக கிய அமசஙகளைபபறறி, உஙகளுககு விளஙகத தெரிவிதது, அவை களினுல இனிமேல இநதியாவுககு உணடாககூடிய பலாபல னைக காணபிககவேணடும.

மேலே சொனன முதல அமசததினுல இநதிய மகா ஜனஙகள ராஜஜியவிஷயமாயுளள தஙகள தஙகள காரியஙகளை தாஙகளே பாாததுவரககூடிய ஏறபாடுகளைச செயவிதது, இநதியாகளும அவைகளின மூலமாய ஸவராஜஜியாதிபததியம அடைநது, பிரஜை களுககு தாஙகளே உததிரவாதிகளாய நிறகுமபடி இநதியாகளை ஆககிவிடவேணடியது எனபதை ஆஙகில மனனா கையயடிததுக கொடுததிருககிறா எனபது விளஙகலாகும "ஸவராஜஜியாதிபத தியம" எனறு சொலலுவதினுலே எபபொழுதும, பிரஜைகளு ககு உததிரவாதம செயயுமபடிககுளளது எனபது இலலை ஒரு தேசததை, அதிலுளள ஒருவராதானே ஏக சககிராதிபததியம வகி தது ஆணடுவநதாலும சரி, அலலது, அததேசததில உளள யாதா மொரு பிரததியேகமான ஜாதியாரோ, மததினரோ, வகுபபினரோ ஆணடுவநதாலும சரி, அவ ராஜஜியாதிபததியததை, அனனியா கள இருநது ஆளும ராஜஜியம எனறு சொலலாமல, ஜனஙகளே தஙகள தேசததை ஆளகிறாாகள எனறு மடடுமதான சொலலக கூடும! அஙஙனம ஆளும ஏக சததிராதிபததியும, அலலது சில பிரததியேகமான வகுபபினரும ராஜஜியததைத தஙகள தஙகள மனோதாமமபோல இஷடபபடி ஆணடுவரின, அவவரசாகஷி, ஆளப படடு வரும பிரஜைகளுககு எஙஙனம உததிரவாதம சொலலக கூடிய ஸதிதியில இருபபது எனறு எணணககூடும? அஙஙனம இஷடமபோல ஆளும அரசனுவது வகுபபினராவது பிரஜைகள ஏறபடுததும ஒழுஙகுககு மீறி, வரமபு கடநது நடநதால, அபபோப படடவாகளை ராஜஜியாதிபததியததினினறும நீககிவிட, பிரஜைகளு ககு ஸவததநதிரமும இருநதாலலலவோ, அநத ஸவராஜஜியததை பிரஜைகளுககு உததிரவாதமாயிருபபது எனறு சொலலககூடும!!

அஙஙனமினறி ஒரு ராஜஜியம, அதிலுளள சிலாகளாலே ஆளப படடு வநதால அநத ஸவராஜஜயததினால யாது பயன விளையும? ஆனதுபறறியே, ஸிககிரடடரி ஆப ஸடேட செயத விளமபரம, "ஸவ ராஜஜியாதிபததியம இநதியாகளுககுக கொடுபபதாய இருநதால, அவவிராஜஜியபாரம பரிபபவாகள ராஜஜியததை சரியாயப பரிபா லிதது வருவதுடன, அவாகள, இநதிய மகா ஜனஙகளுககு உததர வாதம செயயககூடிய நிலைமையிலும இருககுமபடி, இநதியாவில ஸவய அரசாக்ஷி ஏறபடுததி வைககவேணடு மெனபதைததான" இநதியாகளுககு உளளஙகை நெலலிககனிபோல அசசுறுததுகிறது

அவவிளமபரததின இரணடாம அமசமோ, "இநதியாகளுககு உததிரவாதம சொலலுமபடிககான ஸதிதியில ஏறபடுததபபடும ஸவய அரசாக்ஷி ஏககாலததில, இநதியாகளுககுக கொடுததுவிடு வது அநுசிதம" எனபதையும, "அதை காலககிரமததில படிபபடி யாய, மெளளமெளள இநதியாகளுககு ஸவராஜஜியாதிபததியம வகி ககப போதுமான பரிபககுவததைப பாாததுக கொடுததுககொணடு வரவேணடும" எனபதையும விளககுகிறது இநத விஷயஙகளைப பறறி இரணடாம அததியாயததில விரிதது விளககி, யாதுகாரணம பறறி ஸவய அரசாக்ஷி இநதியாகளுககு ஒரே தடவையில கொடு படக கூடாது எனறும, அது படிபபடியாகததான அவாகளுககு காலககிரமததில கொடுபடவேணடும எனறும, அஙஙனம கொடுப பதுதான இநதியாகளுககு நனமை பயககும எனறும, ஸவய அர சாக்ஷி பிரஜைகளுககு உததிரவாதம சொலலககூடிய நிலைமையில இருககச செயதாலதான, அது அலபாயசாய அழிநதுபோகாமல, நீடிதது வேர ஊனறி நிலைபெறறு சிறககலாகும எனறும், நான உஙகளுககு ஸவிஸதாரமாயக கூறியுளளேன

ஆகவே, பிரஜைகளுககு உததிரவாதமாய நிறகும ஸவய அர சாக்ஷி இநதியாகளுககு கைகூடி வருவதறகு அநுகுணமாயச செயயும காரியஙகள ஆரமபமுதல வெகு சாவதானமாயச செய யபபடடு வரவேணடு மெனகிற நோககததுடன, இநதியாகளும, பிரிடடிஷ ராஜாஙகததாா இநதிய ஸவய அரசாக்ஷி விஷயமாயச சொலலுவதில நமபிககை வைதது, பகதி விசுவாஸததுடன அவா கள ஏறபடுததும காரியஙகளை மனநதளராமல முடிதது வந தால, இநதியாவில ஸவய அரசாக்ஷி முறறுபபெறறு நனமை விளககும எனறு தீாமானிதது, பிரிடடிஷ கவானமெனடாா இந திய மகாஜனஙகளுககு, தாஙகள சொலலுவதில நமபிககை உண டாககி, அவாகளுடைய கூடடுறவை வேணடிக கொளளு கினறனா.

ஆகவே, 1917-ம௵ ஆகஸடு௴ 17-ம தேதியில பிரிடடிஷ பாா லிமெணடாா வெளியிடட விளமபரம இததகமையாதலால, அவவிள மபரததை அநுஷடான பூாவமாய நிறைவேறறும நிமிததம இநதிய ஸிககிரடடரி ஆப ஸடேடடும, இஙகிலாநதிலிருநது, இநதியாவுகக 1917-ம௵ நவமபரிலேயே வரலாயிறறு வைஸிராயும, அவரும ககூடி, இநதியாவில அநேக இடஙகளில சென்று, ஆஙகாஙகுளள ஜனஸமூகஙகளின பிரதிநிதிகளைக கணடுபேசி, அவாகள சொல

ளதை மனதில உனனி, ஜனஸமூகஙகளாலும, பல ஜாதிமத வரு
ணாசசிரமததாரகளாலும நேமிதது அனுபபிய பிரதிநிதிகளுடைய
அபிபபிராயஙகளையும கணடு அறிநதுகொணடனா. பிறகு இவ
விருவருமாயச சோநது, தஙகளுககு இநதியா ஸமமநதமாயுளள
விஷயஙகள யாவறறையும ஒருஙகு சோதது, ஒரு ரிபோாடடு
எழுதி, 1917-ம் ஆகஸடுமாதததில செயதிருககபபடட விளம
பரததில கணடுளள அமசஙகளை அமுலுககுக கொணடுவருமபடிககு
அநுகுணமான காரியஙகளையும எடுததுககாடடி, அநத ரிபோா
டடை பாாலிமெணடு மகா ஸபையாருககு அனுபபினா. பிறகு
இவவிஷயஙகளைப பரியாலோசிககும வணணம ஒரு கமிடடியார
ஏறபடுததப படடனா. அககமிடடியார இநதியா எஙகும சென்று,
ஆஙகாஙகே வாககுமூலஙகள வாஙகி, இநதியாவில பிரஜைகளுககு
உததரவாதம சொலலுமபடியான அரசுரிமை இநதியாகளுககுக
கொடுபபதினபொருடடு, சடடசாமாண ஸபைகளுககு ஜனஙகளே
தஙகள பிரதிநிதிகளைத தோநதெடுககுமபடி, அநேகம தொகுதிகள
இநதியாவில ஏறபடுததபபடவேணடும என்று, பாாலிமெணடு
ககு தஙகள அபிபபிராயததை தெரிவிததனா. இவாகள செயத
தீாமானஙகளை ஒரு ஆகடாக ஆககிவிடவேணடும எனகிற நோக
கததுடன ஸெகரடரி ஆப ஸடேடடும, இவைகளை எலலாம
அடககி, ஒரு மசோதா ஆகடாக பாாலிமெணடு மகாசபையா
ரின முன வைததனா. அசசபையார அநத மசோதா ஆக
டைப பரிசீலனை பணணி ஆலோசிதது ரிபோாடடு செயயுமபடி
வேறொரு கமிடடியும நேமிததனா. அககமிடடியும, மசோதா
வில கணட விஷயஙகள சரி என்று அஙகீகரிதது, இடை இடையே
சிறசில மாறுதலகள மடடும செயதனா. அமமாறுதலக
ளாலே நனமையே ஒழிய வேறிலலை. அவைகள இநதியாகளுககு
அரசுரிமையை அதிகரிபபதறகாகவே ஏறபடடுளளன.

இநதியாகளுககு உததரவாதம சொலலுமபடியான அரசுரிமை
கொடுபபதறகு முதல படியில செயயவேணடிய காரியமாவது,
அவாகள தாஙகளே பிரதிநிதிகளைத தோநது எடுததுககொள
ளும அதிகாரம அவாகளுககுக கொடுததுவிடவேணடுவது என
றும, "அவவதிகாரம, படிதத சிலவருககுமனறுககும சில மேலான
ஜாதியாருககும, நிலததிறகுடைய சில பிரபுககளுககும, வியா
பாரிகளுககும மாததிரமே தறகாலமபோல இருககககூடாது"
எனறும, கிராமஙகளில உளள குடிகளும, படடணஙகளிலுளள
வேலைககாராகளும, இனனும இவாகள போனற ஏழைகளும தங
கள ராஜஜிய விஷயமான ஏறபாடுகளைத தெரிநதுகொளள இது
வரையில இடம கொடாமல வைததிருநததுபோல விடடுவிடாமல,
இவவகையான ஜன சமூகஙகளுககும தஙகள பிரதிநிதிகளைத தோ
நது எடுககககூடிய உரிமைகளைக கொடுததுவிடவேணடும" என
றும, பாாலிமெணடாரால நியமிககபபடட கமிடடியார சிபாாசு
செயதனா. மேலும "பிரஜைகளுககு, ராஜாங்க ஸமபநதமாய
நடககும காரியஙகளில, ஞானத்தை ஆரமப முதல உணடாககி,
அவாகளுககு சமயம வாயததபோது தஙகள அரசுரிமையை, சரி
வர பரித்து விடுமபடியாயக கொடுதது, அதினால அவாகள முனனு

க்கு வருவதைப் பார்த்து அவர்களுக்கு மேன்மேலும் அரசுரிமையை விர்த்திசெய்விக்க வேண்டும்" என்றும், கமிட்டியார் செய்த சிபார்சும் அங்கீகரிக்கப் பெற்றது. கமிட்டியார்—பிரஜைகள், ஜனங்கள், என்று பதப்பிரயோகம் பண்ணினதிலேயே, அவர்கள் பிரஜைகளில் படித்துத் தேர்ந்த சில வகுப்பினர் என்றாவது, பணம் மிகுந்த பிரபுக்கள் என்றாவது கொஞ்சமேனும் எண்ணம் கொள்ளாமல், கிராமவாஸிகளாயுள்ள ஜனங்கள் என்றும், பட்டணங்களில் வேலைசெய்து பிழைக்கும் கூலிவேலைக்காரர்கள் என்றும், இன்னம் இதர தாழ்ந்த வகுப்பினர்கள் என்றுமே, பிரத்தியேகமாய்ச் சுட்டிக்காட்டி இருக்கின்றனர். ஆகவே, இத்தகைய சிபார்சுகள் இந்தியாவில் நூதனமாய் ஏற்படுத்தப்பட்ட சீர்திருத்தங்களுக்குக் காரண பூதமாயுள்ள முக்கிய விஷயங்கள் ஆகையால், இந்தியாவில் ஜனங்கள் அரசுரிமை அடைந்து, அவர்கள் அரசாக்ஷி தங்களுக்கே உத்திரவாதமாய் இருப்பதற்கு, மேல் சொல்லப்பட்ட விஷயங்களையாவும் இந்தியர்களுக்கு வெகு பிரதானமானவை அவைகள், இந்துதேச சரித்திரத்தை மேலோங்கச்செய்ய ஆரம்பம், பண்ணி இதுகாறும் இருந்ததுபோல இந்திய அரசாக்ஷி, பணம் மிக்கு அதிகாரம் வாய்ந்த சில பணக்காரர்களால் மட்டும் நடைபெறவொட்டாமல், குடிகளும், உழுது பயிரிடுவோரும், வேலையாட்களும்கூட அரசாக்ஷியின் பாரத்தை வகிக்க இடம் உண்டாக்கி, இந்திய அரசாக்ஷியும் இந்திய பிரஜைகளாலேயே நடத்தேறும் அரசாக்ஷி என்று சொல்லும்படியான மார்க்கமும் ஏற்படலாயிற்று.

---

# 5-ம் அத்தியாயம்.

## (Reform in Local Bodies)

## ஸ்தல ஆக்ஷியில் சீர்திருத்தம்

நான்காம் அத்தியாயத்தில் சொல்லியபடி, இந்தியாவில் ராஜாங்க சம்பந்தமாய சீர்திருத்தங்கள் ஏற்பட, ஸிக்ரடரி ஆப் ஸ்டேட் 1917-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் செய்த விளம்பரமே பிரதானம் என்றும், அவ்விளம்பரத்தின்மேல் அவர் இந்தியாவுக்குவந்து வைஸிராயோடு கலந்து பார்லிமெண்டாருக்குக் கொடுத்த ரிபோர்ட்டின் பேரில், அச்சபையார் அதைப் பரியாலோசனை செய்து பார்க்க ஒரு கமிட்டி ஏற்படுத்தி, ஸிக்ரடரி ஆப் ஸ்டேட்டும், ஒரு மசோதா ஆக்டைப் பிறப்பித்து, அந்த மசோதா ஆக்டும் மறுபடி ஒரு கமிட்டியார் பரிசீலனைக்குள்ளாகி, அக்கமிட்டி அதின் பேரில் செய்த சிபார்சுகளையே ஒட்டிப் பிறப்பித்த மசோதா ஆக்டை பிரிட்டிஷ் பார்லிமெண்டு மகாசபையாரும் 1919-ம் டிஸம்பர் மாதம் சட்டமாக ஆக்கிவிட்டனர் அச்சட்டத்தை நமது சக்கரவர்த்தியும் அங்கீகாரம் செய்து, அதற்கு அத்தாக்ஷியாக தம்முடைய முத்திரையும் அதில் போட்டுள்ளனர்

இந்திய மகாஜனங்களுக்கு அரசுரிமை வாய்த்து, அவ்வரசாக்ஷி அவர்களுக்கு முழுமையும் உத்தரவாதம் செய்யக்கடமைப்பட்டு, இருக்கிறது என்பது மேல்சொன்ன சட்டத்தின் முகவுரையில் தாராளமாய் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது என்று, நான் உங்களுக்கு ஏற்கனவே தெரிவித்திருக்கிறேன் மேலும், அவ்வரசாக்ஷி செய்ய அதிகாரமும் ஸ்வதந்திரமும், ஸர்க்காரரேயாவது, அல்லது ஸர்க்கார் உத்யோகம் வகிக்கும் சில பெரிய உத்தியோகஸ்தர்களாலேயாவது, வாய்மொழியாய்க் கொடுக்கும் வெறும் வாக்குகளைப் பொறுத்து மாத்திரம் இந்திய சீர்திருத்தங்கள் இராமல், அவைகள் சட்ட பூர்வமாய் ஏற்பட்டுப்போவது இந்திய ஜனங்களுக்கு எவ்வளவு நன்மையாகும் என்பதையும், நான் அதே அத்தியாயத்தில் உங்களுக்கு விளக்கி இருக்கிறேன் மேலும் உத்தரவாதமாய் இருக்கப்பட்ட ராஜாங்கம் என்றால் என்ன என்பதையும் உங்களுக்குத் தெரிவித்திருக்கிறேன் அவ்வுத்தரவாதமாயுள்ள ராஜாங்கம் எப்படிப்பட்டது என்பதை இன்னும் இப்பொழுது விஸ்தரித்துச் சொல்லப்போகிறேன்

“ பிரஜைகளுக்கு உத்தரவாதமாயுள்ள ராஜ்ஜியாதிபத்தியம் ” என்பதின்றி, பிரஜைகளே, தங்கள் ராஜ்ஜியத்தைப் பராமரித்து, பாதுகாத்து நடத்திவருவது என்பதாகும் பிரஜைகள் எங்ஙனம் ராஜ்ஜியத்தை பராமரித்து பாதுகாத்து நடத்திவருவது என்பதை விசாரிக்குமளவில், சட்டநிர்மாண சபைகளுக்கு பிரஜைகள் தாங்களே, தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து, அவர்களைக்கொண்டு

ராஜ்ஜிய விஷயங்களை மேன்பாராகச்சொல்லி, நடத்துதலாகும். அப்பிரதிநிதிகள்தான் ராஜாங்க ஸம்பந்தமான சட்டங்களைப் பிறப்பித்து, அச்சட்டங்களைச் செலாவணியாக்கி, அமுலுக்குக் கொண்டுவரத்தக்க உத்தியோகஸ்தர்களை நேமிக்கலாகும். அங்ஙனம் பிரஜைகளின் பிரதிநிதிகளாலே பிறப்பிக்கப்பட்ட சட்டங்களாயினும், அவர்களாலே நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களாயினும் பிரஜைகளுக்குத் திருப்திகரமாய் இராமலிருந்து விட்டால், பிரஜைகள் அப்போதப்பட்ட பிரதிநிதிகளை பாதகிருப்புப்பண்ணி, அவர்களுக்குப் பதிலாய் வேறு பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து, அவர்களைச் சட்டநிர்மாண ஸபைக்கு அங்கத்தினர்களாக அனுப்பி, அவர்களைக்கொண்டு, பிரஜைகளுக்கு அநுகூலமுமுள்ள வேறு சட்டங்களைப் பிறப்பித்து, வேறு நல்ல உத்தியோகஸ்தர்களையும் நேமிப்பிப்பதாகும். ஆகவே, உத்தரவாதமாய் நிறைக்கூடிய ராஜ்ஜியாதிபத்தியம் நிலைபெறும் நாட்டில், ஜனங்கள்தான், தங்களுக்கு ஹிதமாயுள்ள சட்டங்களைப் பிறப்பித்துக்கொண்டு, அச்சட்டங்களை, தங்களுக்கு திருப்திகரமாயும் தாங்கள் ஸௌகரியமடையும்படியாயும், சரியானபடி அமுல்நடத்த அருகதையுள்ள உத்தியோகஸ்தர் முதலான சிப்பந்திகளை தாங்களே நியமித்துக்கொண்டு, அங்ஙனம் செய்வதற்கு அநுகூலமாய ராஜ்ஜியத்திற்குப் பிரதிநிதிகளைச் சரியானபடி தெரிந்தெடுக்கும் நிமித்தமாய், பல தொகுதிகளாக ராஜ்ஜியத்தைப் பிரித்து, ராஜ்ஜியாதிபத்தியத்தை ஜனங்கள் வகித்துவருகிறவர்கள், என்பது உங்களுக்கு இப்பொழுது நன்றாய் புலப்படும்.

இவ்விதமாய்ச் சொல்லிவந்த ஸ்வதந்திரமாவது, அதிகாரமாவது இதுவரையில் இந்தியர்களுக்குக் கிடைப்பதே கிடையாது. அவ்வித அதிகாரத்தை, பிரிட்டிஷ் ராஜ்ஜிய பார்லிமெண்டு மகாசபையாரின் உத்திரவின்பேரில், ஆங்கிலேயர்களே இதுகாறும் இந்தியாவில் செலுத்திவந்தனர். அந்த பார்லிமெண்டுக்கு மாத்திரமே, இந்திய கவர்ன்மெண்டாரால் நேமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களும் உத்தரவாதமாய் இருக்கிறவர்கள். தகப்பனார் தன் குழந்தைகளைப் பராமரித்துப் பாதுகாத்து வருவதுபோல, இந்தியர்களையும் இந்தியாவிலுள்ள அவ்வாங்கில உத்தியோகஸ்தினர் பராமரித்து வந்து அவர்களுக்கு அநுகூலமாயுள்ள காரியங்கள் ஒவ்வொன்றையும் செய்து வந்திருக்கின்றனர்.

பார்லிமெண்டாரால் பிறப்பிக்கப் பெற்று, மாக்ஷிமைதங்கிய நமது சக்கிரவர்த்தி அவர்களாலும் அங்கீகரிக்கப்பட்டும் இருக்கிற, இந்தியாவைக் குறித்த இந்த நூதனச் சட்டத்திலுள்ள முடிவாய தெரியவருவது யாதெனில் —இந்தியர்கள், தகப்பனாரால் பராமரிக்கப்படும் குழந்தைகள்போலவர் அல்லர். அவர்களுக்கு புத்தி அதிகரித்து, ராஜாங்க விஷயங்களிலும், பொது நல விஷயங்களிலும் ஊக்கமும் மிகுதியாகிவிட்டது. தங்கள் ராஜ்ஜியத்தின் நன்மையைக் குறித்து, அவர்கள் எல்லாரும் ஏகோபித்து ராஜ்ஜியத்தை நடத்தத்திறமை வாய்ந்தும் உள்ளனர். பேசத்திறமையற்ற மூடாத்துமாக்களாய இது காறும் இருந்துவந்த கோடானுகோடி ஜனங்கள் என்று அவர்களை இனி மதித்தல் தவறு. எங்ஙனம் குழந்தை வாலிப பருவத்திற்குவந்து தன் தன் காரியத்தைத் தானே பார்த்துக்

கொள்ளத் திறமை ஏற்பட்டு, பிறகு நாளாவட்டத்தில் படிப்படியாய் அநுபவம் மிக்கு, வாலிபம் நீங்கக் கடைசியில் காளைப் பருவமடைந்து முழுமனிதனாகி விடுவதேபோல், இந்தியர்களும், தங்கள் தங்கள் காரியத்தைத் தாங்களே பார்த்துக்கொள்ளுவதற்குப் போதுமான சக்திவாய்ந்தவர்கள் ஆகி இருக்கின்றனர்”

இவ்விதமாகத்தான் இந்நூதனச்சட்டம் இந்தியர்களுக்கு உத்தரவாதமாய் நிற்கும் ராஜ்ஜியாதிபத்தியத்தை அடைய மூலகாரணமாய் நின்று வழிகாட்டும் முதற்படியாகும்.

இம்மூலாதாரமான நூதனச்சட்டம் இந்திய ஜனங்களுக்கு எங்ஙனம் நன்மை பயிற்றி அவர்களை மேலோங்கச் செய்யப் போதுமானது என்பதை நீங்கள் நன்கறிய வேண்டுமானால், இந்நூதன ஆக்ட்டை, இதுகாறும் நடவடிக்கையிலிருந்து நன்குவாய்ந்திருந்த பழைய ஆக்டோடும் ஒப்பிட்டுப் பார்த்து, பழைய ஆக்டைவிட இதில் என்ன என்ன விசேஷமான மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டுவது அவசியம்.

‘ராஜாங்கம்’ என்பது, உள்ளங்காலாதியாய் உச்சிவரையில் படிப்படியாய் இருந்துவரும் அநேக அவயவங்கள் ஒருங்குசேர்ந்த மானிட சரீரம்போல் ஒரு அமைப்பு, என்பதை நான் ஏற்கனவே விளக்கிக் காட்டியிருக்கிறேனல்லவா? உச்சி மண்டைக்குள்ளிருக்கும் மூளையாகிற மூலப்பொருள் தானே சரீரத்துள்ள அவயவங்களையாவையும் அடக்கி ஆண்டு வருகிறது உங்களுக்குத் தெரிந்திருப்பது அன்றோ? இந்தியாவில் உள்ள ராஜாங்க அமைப்பும், மானிடசரீரம் போல பல உறுப்புகளால் அமைக்கப் பெற்றதாய், அவ்வுறுப்புகளும், மானிடசரீரத்தில் பாதாதிகேசம் வரையில் உள்ள பல அவயவங்கள் போல, பலவகைப்பட்டவையாம். அவ்விதம் பலவகைப்பட்ட உறுப்புகளைப்பற்றி பின்வருமாறு எடுத்துக் கூறுவேன் —

கிராமங்களும், அக்கிராமங்கள் சேர்ந்துள்ள தாலூகாக்களும், அத்தாலூகாக்கள் அடங்கிய ஜில்லாக்களுமே இந்திய ராஜாங்கத்திற்கு முதல் உறுப்பாகும். இவைகள்தான் மானிட சரீரத்திற்குள்ள பாதம்போன்ற உறுப்புகள். கிராமங்கள் ஜில்லாக்கள் இவைகளைப்பற்றிய ராஜீய காரியம் மாகாண கவர்ன்மெண்டுக்குக் கீழடங்கி, பரிபாலிக்கப்பட்டுவருகிறது. அம்மாகாண கவர்ன்மெண்டுகளும், நடுநாயகமுள்ளதாய் நிற்கும் இந்தியா கவர்ன்மெண்டிற்கு உட்பட்டு நடப்பது. அவ்விந்தியா கவர்ன்மெண்டு இங்கிலாந்தில் உள்ள ஸிக்கிரடரி ஆப் ஸ்டேட் என்கிற மந்திரிக்கும், அவரோடு சம்பந்தப்பட்ட ஒரு ஸபையாருக்கும் கீழடங்கிவருவது. ஸிக்கிரடரி ஆப் ஸ்டேட் என்கிற மந்திரி பார்லிமெண்டு மகாசபையின் உத்திரவுக்குக் கீழ் அடங்கி நடப்பவர். பார்லிமெண்டு மகாசபையோ, ஆங்கிலேயர்களால் அச்சபைக்கு, மெம்பராகத் தேர்ந்தெடுக்க அருகதையுள்ள எலக்டார்களுக்குக் கீழிருந்து நடப்பது.

ஆகவே, இந்திய அரசாக்ஷி சம்பந்தமான காரியங்களைப் பரிசீலனைசெய்து ஒரு கடைசி முடிவுக்குக் கொண்டுவரும் அதிகாரம், மேல்சொல்லிய ஆங்கில நாட்டு எலக்டார்களுடையது என்று நீங்கள்

எளிதில் அறிந்து கொள்ளலாகும். இப்பொழுது ஏற்படுத்தப்பட்ட இந்திய நூதன ஆக்டானது, இந்தியா சம்பந்தமான காரியங்களை முடிவுசெய்ய ஆங்கில நாட்டு எலக்டர்களிடம் இதுகாறும் இருந்த அதிகாரம் மாறிப்போய், அது இந்திய நாட்டிலுள்ள எலக்டர்கள் கையில் வந்திருக்கிறது. ஆனதுபற்றி இந்த அதிகாரம் நம் நாட்டாருக்கு வந்திருப்பது நம் நாட்டுக்கு எவ்வளவு நல்ல ஆதாரமான மூலசாதனம்! இம்மூலசாதனமே, நம் தேசத்து அரசுரிமையை நம்முடைய எலக்டர்களே வகித்து, காலக்கிரமத்தில் பூரணஸ்திதியை யடையப்பெற்று, ராஜ்ஜியபாரம் முழுவதையும் பரித்துவருவதற்கு ஹேதுவாயிருக்கிறது அல்லவா?

ஆகவே, இப்பொழுது இம்மூலசாதனமாகிற ஆக்டானது, நம் நாட்டு எலக்டார்களுக்கு எவ்விதம் என்ன என்ன அதிகாரத்தைக் கொடுக்கக்கூடியது என்பதை விளக்க நம் ராஜாங்க அமைப்பிலுள்ள மேற்சொல்லிய உறுப்புக்களை ஒவ்வொன்றாய் எடுத்து விஸ்தரிப்போம்.

ராஜாங்கத்திற்கு முதல் முதலாயுள்ள உறுப்பு கிராமமும், தாலூகாவும், ஜில்லாவுமாகையால் இவைகள் பரிபாலிக்கப்பட்டு வருவதை நான் முன்னில் எடுத்துக் காட்டுகிறேன். இவைகள் பரிபாலனத்திற்குத் தான் ஸ்தல ஸ்வய ஆக்ஷி அல்லது லோகல் ஸெல்வ் கவர்ன்மெண்டு என்று பெயர். இம்முதல் உறுப்பான கிராமங்களிலும், தாலூகாக்களிலும், ஜில்லாக்களிலும் அவைகளை பரிபாலித்துவர லோகல்போர்டு என்றும் முனிஸிபாலிடி என்றும் வழங்கும் ஸ்தல சபைகள் உண்டு. இந்த லோகல் போர்டுகளுக்கும், முனிஸிபாலிடிகளுக்கும் மெம்பர்களை அந்த ஜில்லாவிலுள்ள கிராமத்தார்களே தேர்ந்தெடுக்கிறவர்கள். அம்மெம்பருள் சிலர் ஸர்க்காரால் நேமிக்கப்படும் உளர். மூலாதாரமான படிப்பு, சுகாதாரம், ஊருக்கு ஊர் ரோட்டுகள் போடுதல் ஆகிய விஷயங்களை மேற்சொல்லிய போர்டுகளும் முனிஸிபாலிடிகளும் பரிபாலித்து வருகிறார்கள். இப்பொழுது ஏற்பட்டிருக்கும் சீர்திருத்தங்களாலே இந்த போர்டுகளிலும் முனிஸிபாலிடிகளிலும் மெம்பர்களாக நேமிக்கும் எலக்டார்களுக்கே, இவைகளைப் பரிபாலித்து உத்தரவாதமாயிருக்கும்படியான ஸ்வயாக்ஷி சம்பூர்ணமாய் கொடுபட்டிருக்கிறது. அதாவது, நூதனச் சீர்திருத்தத்தாலே, கிராமம், தாலூகா ஜில்லாவில் உள்ள ஜனங்களுக்கே தங்கள் ஜில்லாவிலுள்ள முனிஸிபாலிடிகளையும் லோகல் போர்டுகளையும் பரிபாலித்துவர முழு அதிகாரம் ஏகமாய் கிடைத்துவிட்டது. ஸர்க்கார் மேற்பார்வையும் குறைந்துபோய் ஜனங்களுடைய மேற்பார்வையே இவைகளில் மிகுந்து இருக்கிறது. இதுமுதற்கொண்டு இந்த லோகல்போர்டு முனிஸிபாலிடி பரிபாலனம் ஜனங்கள் கையில் கிடைத்து அவர்களே அவைகளைச் சரிவரப் பார்த்து யஜமானத்துவம் பரிக்கலாகிறது.

இங்ஙனம் முனிஸிபாலிடிகளுக்கும் லோகல்போர்டுகளுக்கும் தங்களுக்குள்ள கார்யா காரியங்களைப் பார்த்துவருவதற்கு ஸ்வதந்திரம் பூராவாகக் கிடைத்திருப்பது அற்ப சொற்பமல்ல. அதி

னால் அநேகம் பிரதானமான காரியங்கள் சித்திபெறலாகும் என்பதை நீங்கள் பரியாலோசனை செய்யவேண்டும். கிராமங்கள் சேர்ந்து தாலூகாவாகி, தாலூகாக்கள் சேர்ந்து ஜில்லாவாகிறது என்று முன்னமே சொல்லியிருக்கிறேன். ஆகவே இந்திய ராஜ்ஜியம் முழுவதற்கும் கிராமங்களே ஜீவாதாரமாகும். இக்கிராம சமூகத்தைத்தான் வாஸ்தவமாய் இந்தியா என்று சொல்லவேண்டும். இவ் இந்தியாவில் ஒன்பது லக்ஷத்திற்கு அதிகம் கிராமங்கள் உண்டு. இந்தியர்களில் 10-ல் ஒரு பாகத்தினர்தான் பட்டணங்களில் வசிப்பவர். அதாவது ஒன்பது லக்ஷம் ஜனங்களில் கிராமவாசிகள்தான் ஏராளம். நகரவாசிகள் மிக சொற்பம். ஏராளமாயுள்ள கிராமவாசிகள்தான் நிலத்தை உழுது பயிரிட்டு இந்தியா முழுவதற்கும் வேண்டிய உணவுப் பொருள்களைக் கொடுக்கின்றனர். கூலியாட்களும், சிப்பாய்களும் இக்கிராமங்களிலிருந்தே வருபவர்கள். இந்தியாவில் நடந்திருக்கும் அநேகவிதமான சண்டை சச்சரவு படையெழுச்சி ஆகிய இவைகளுக்குத் தப்பிப் பிழைத்து இந்தியாவைக் காப்பாற்றி வந்திருப்பதும் இக்கிராமங்களே. இந்தியாவில் வெகுகாலமாய் ராஜாங்கத்தைக் குறித்து ஒரு வசனம் பழமொழியாக விளங்கிவருகிறது. அது 'ராயால் ஆண்டு வருவது ராஜாங்கம்' என்பது. “ராய” என்னும் பதத்தோடு சேர்ந்த “ரயட்” என்பது பயிரிடுவோருக்குக் கொடுபட்டிருக்கும் பெயர். ஆகவே “ராயின்” ராஜ்ஜியம் என்பதல்ல, ராஜ்ஜியத்திலுள்ள குடிகளாகிற ரயட்டுக்களின் நன்மைக்காக ஆளப்படுவது என்று பொருள் விளங்கும். ஆகையினாலே புராதன காலமுதல் கொண்டு ராஜ்ஜியபாரம் பண்ணுவதின் ஆதாரங்கத்துவய ரயட்டுக்களின் சௌக்கியத்தைத்தான் ஒரு ராஜ்ஜியத்தில் பிரதானமாய் முதல் முதலில் கவனிக்கவேண்டும் என்று ஏற்படுகிறது. அதிலிருந்துதான் ரயிட்டுக்களின் சௌக்கியமாத்திரம் அன்றி, இதர ஜனங்களின் சௌக்கியத்தையுங்கூட நாடிச் செலுத்துவது ராஜாங்கம் என்று வரலாயிற்று. ஆகவே, கிராமங்களிலும், தாலூகாக்களிலும், ஜில்லாக்களிலுமுள்ள ரயட்டுத்தான், இந்திய நூதனச் சீர்திருத்தத்தில் ராஜ்ஜிய யஜமான ஸ்தானம் வகித்து, கூடுமானவரையில் அவர்களே தங்கள் ஸ்தல ஆக்ஷியைக் கவனித்து வருவது லேசான காரியம் என்று எப்படி அலக்ஷியம் செய்யலாகும்? அங்ஙனம் அவர்களுக்கு நூதனச் சீர்திருத்தத்தால் கிடைத்திருக்கும் ஸ்வய ஆக்ஷி உரிமை வெகு பிரதானமானது. இந்த ஸ்தல ஸ்வயாக்ஷிக்கு அடுத்தபடியாகச் சொல்லவேண்டியது — மாகாண கவர்ன்மெண்டிலும், அதை அடக்கி ஆளும் இந்தியா கவர்ன்மெண்டிலும், பிரஜைகள் சரியானபடி தங்களுக்குள்ள அதிகார முறையைச் செலுத்தப் போதுமான திறமையை அவர்களுக்கு உண்டாக்க ஸ்தல ஸ்வய ஆக்ஷியைக் கொடுத்து நிர்வகிக்கச் செய்வதே மூல சாதனமாகும்.

காலஞ்சென்ற கிளாட்ஸ்டன் பிரபுவும் இதைக்குறித்து, ஸ்தல ஸ்வய ஆக்ஷி கொடுத்து ஜனங்களைப் பழக்கப்படுத்துவதே இந்திய ஆக்ஷி முழுவதையும் நிர்வகிக்கப் போதுமான சக்தியுண்டாக்குவதற்குத் தகுந்த பள்ளிக்கூடம் என்று சொல்லியிருக்கின்றனர். அவர் அங்ஙனம் சொல்லவேண்டிய காரணம் யாதெனில் ஸ்வய ஆக்ஷியி

லிருந்து ஜனங்களுக்கு உண்டாகும் அநுபவத்தால் அவ்வாக்ஷியின் மாதிரியும் நடப்பு நடவடிக்கையும் தெரியப்பெற்று, ராஜ்ஜியம் முழுவதையும் அரசாண்டுவரத் திறமைவாய்ந்துள்ள பிரதிநிதிகளை அவர்களே தேர்ந்தெடுக்கக்கூடிய சக்தி ஏற்படலாகும். இந்தியாவில் ரிபன் பிரபு வைஸிராயாய் இருந்து வந்தது உங்களுக்குத் தெரியாத விஷயமல்லவே? அவரிடத்தில் ஜனங்களுக்கு வெகு பிரீதி. அவரிடமுள்ள பிரீதியைப்போல் வேறு எந்த வைஸிராய்களிடத்திலும் இந்தியர்களுக்கு அவ்வளவு பிரீதிகிடையாது. அவரும், 'ஸ்தல ஸ்வய ஆக்ஷியே நாடுமுழுவதையும் அடக்கி ஆளப் போதுமான வித்தையை ஜனங்களுக்குக் கற்பிக்கலாகும்" என்று பேசியிருக்கின்றனர். ஸ்தல ஆக்ஷியே பிரிட்டிஷ் ராஜாங்க அமைப்பிற்கு இசைக்கல்போல் பிரதானமானது என்னலால், அவ்வாக்ஷி நிலைபெறும் ஸ்தலங்களிற்கு அக்கம்பக்கத்திலிருக்கும் ஜனங்களும் அவ்வாக்ஷி எப்படி நடந்தேறிவருகிறது என்பதையும், ஜனங்களாலே தெரிந்தெடுத்து நேமிக்கப்படும் சபைகளும், லோகல் போர்டுகளும் எங்ஙனம் ஜனங்களுக்கு சுகாசுகம் உண்டாக்கி வருகின்றன என்பதையும், லேசாய் அறிந்துகொள்ள இடமாகும். ஆகவே, லோகல் போர்டுகளிலும், முனிஸிபாலிட்டிகளிலும், கூடுமானவரையில், ஜனங்களுக்கே ஸ்வயாதிகாரம் கொடுத்து, கிராமங்கள், தாலூகாக்கள், ஜில்லாக்களாகிய இவைகளிலுள்ள ஜனங்கள் அவ்வதிகாரத்தை வகிக்கும்படிச் செய்திருப்பது நூதனச் சீர்திருத்தத்தின் முதல் லாபம் என்றும், அது பிரதானமானது என்றும் விளங்கவில்லையா? அதாவது, சுருக்கிச் சொல்லுமளவில் ராஜ்ஜியாதிபத்திய விஷயங்களில், ஜனங்களுக்கு உத்திரவாதம் செய்யும் அரசுரிமை பூராவாய் கொடுபட்டிருக்கிறது என்பது அறியலாகும். இதுமாத்திரமல்ல. இன்னமும் கேளுங்கள். கிராமத்திலுள்ள குடிகளுக்கும் தாலூகா என்று பேர்வழங்கும் பட்டணங்களிலுள்ள கூலிவேலைக்காரர்களுக்கும், தங்கள் மாகாண அரசாக்ஷியிலும், அதற்கு மேற்படியாயுள்ள இந்திய அரசாக்ஷியிலும் அதிகாரம் என்பது இதுவரையில் கிடையவே கிடையாது. இதுமுதற்கொண்டு, அவர்களும் அவ்வித அரசாக்ஷியைப்பற்றி எடுத்துப் பேசவும், அவைகள் சரியானபடி நடந்தேறுகின்றனவா என்பதைப் பரிசீலனை பண்ணவும் ஸ்வதந்திரம் அவர்களுடைய பிரதிநிதிகளாய் இருக்கும் எலக்டார்களுக்கு உண்டாயிருக்கிறது. குடிகள் நிலவரியாக ஏதாகிலும் சாதாரணமாய் ஏற்படுத்தப்பட்ட தொகை கட்டினாலுஞ்சரி, அல்லது கூலியாட்களாயிருந்து வருஷத்தில் ஒரு சுமார் சம்பாத்தியமுடையவர்களாயிருந்தாலுஞ்சரி, இவர்கள் எலக்டார்களாகித் தாங்களிருக்கும் தாலூகா ஜில்லா ஆக்ஷியைப் பரிசீலனைசெய்து பார்க்க ஸ்வதந்திரம் உடையவர்களாவர். இதுமாத்திரம் அல்லாமல், மாகாண அரசாக்ஷியிலும் தங்களுக்குள்ள அதிகாரத்தைச் செலுத்த உரிமையுள்ளவர்களாகிறார்கள். ஆகவே, சர்வகலாசாலையில் வித்தியாபிவிருத்தியில் பட்டம் பெற்று, அந்தஸ்து உள்ள புத்திமான்களோடும், பணம் மிகுந்து நிலபலம் அதிகமாயுள்ள பெரியதனக்காரர்களோடும், குடிக்கூலி சுமாராய்க் கட்டுபவர்களோடும் இதர எளிய ஜனங்களும் சமத்துவமாய் எலக்டார்களாகிவர, ஸ்வதந்திரம் கிடைத்திருப்பது நூதன சட்டத்தினாலேயே.

# 6-ம் அத்தியாயம்

## மாகாணச் சட்டநிர்மாண சபைகளில் சீர்திருத்தம்

ஸ்தல ஆக்ஷியை ஜனங்களுக்குக் கொடுத்தது, அது ஜனங்களுக்கு எவ்விதம் உத்தரவாதமாய் நின்று மேலோங்கிவரக்கூடியது என்பதை 5-ம் அத்தியாயத்தில் விளக்கிக் காட்டியிருக்கிறேன். அதற்கு மேல்படியாயுள்ள மாகாண அரசாக்ஷியின் அமைப்பைக் குறித்து இந்த அத்தியாயத்தில் எடுத்துச் சொல்லப்போகிறேன். அவ்வரசாக்ஷியில் மாகாணத்திற்கு சட்டங்கள் ஏற்படுத்திவைக்கச் சட்டநிர்மாணசபை என்றும், அச்சட்டங்களின்படி மாகாணத்தைப் பரிபாலித்துவர நிர்வாக சபை என்றும் இருவித சபைகள் உண்டு.

இச்சட்ட நிர்மாண சபையில் ஜனங்களுக்கு உத்தரவாதமாய் நிற்கும் அரசாக்ஷி எங்ஙனம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது என்பதையும் அதில் எவ்வளவு வரையில் ஜனங்களுக்கு அதிகாரம் உண்டு என்பதையும் நாம் முதலில் பார்ப்போம். தற்காலத்தில் இச்சபையில் மூன்றுவகையான மெம்பர்கள் உண்டு. (1) சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், (2) ஸர்க்காரால் நேமிக்கப்பட்ட ஸர்க்கார் உத்தியோகமில்லாத ஐரோப்பியர்களும் இந்தியர்களும், (3) வர்த்தக சங்கத்தார்கள், சர்வகலாசாலைகள், நிலத்திற்குடையவர்கள், மகம்மதியர்கள், யந்திரசாலை வைத்திருப்பவர்கள், ஜன சமூகங்கள், முனிஸிபாலிடிகள், ஜில்லா போர்டுகள், ஆகிய பலவித சமூகங்களின் சிபார்சின் பேரில் சர்க்காரால் நேமிக்கப்படும் இதர மெம்பர்கள். இந்த சமூகங்கள் யாவும் சர்க்காராலேயே தேர்ந்தெடுக்கப்பட்டவைகள். ஆகவே, இந்த மூன்றாவது வகுப்பிலிருந்து வரும் மெம்பர்களை மாத்திரம்தான் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்று ஒருவாறு சொல்லலாகும். இப்பேர்ப்பட்ட மெம்பர்களையும் பேருக்குத்தான் மெம்பர்கள் என்று சொல்லவேண்டும். இவர்கள் ஜனங்களால் ஏற்படுத்தப்பட்டவர்கள் என்று சொல்லிக்கொள்வது வெறும்பேச்சுத்தான். வாஸ்தவமாய் இவர்கள் சர்க்காராலேயே தான் நேமிக்கப்படுபவர்கள். ஏனெனில், மேற்சொல்லிய ஜனசமூகங்களுக்கு, சட்டசபைக்கு மெம்பர்களை சிபார்சு மாத்திரம் செய்ய உரிமையே தவிர, அவர்களைத் தாங்களே சர்க்காரனியில் மெம்பர்களாய் நேமகம் பண்ண உரிமை கிடையாது. சர்க்காரும், அப்படி ஜனங்கள் சிபார்சினால் வரக்கூடிய மெம்பர்களை நேமித்தாலும் நேமிக்கலாம் நேமிக்காமலும் இருந்துவிடலாம். இது சர்க்காரின் இஷ்டம்போலத்தான் நடக்கும். ஆகவே இவர்களையும் சர்க்காரால் நேமிக்கப்பட்டவர்கள் என்றே சொல்லிப்போடலாம். ஆகையினாலே, மாகாணச் சட்ட சபையின் அமைப்பு, பூராவாய், சர்க்கார் உத்தியோகஸ்தர்களாலும், ஸர்க்காராலே நேமகம் பண்ணப்பட்டவர்களாலும் அடங்கி உள்ளதே தவிர வேறில்லை.

அடுத்த வருஷம் முதற்கொண்டு இந்தியாவில் நூதனச் சட்டம் அனுஷ்டானத்திற்கு வருவதால், இச்சட்டசபை தற்கால ஸ்திதியைப்போல் இருக்கப்போவதில்லை. இனிமேல் இச்சபையில் மொத்தம் 100 மெம்பர்கள் இருந்தால் அதில் 70 மெம்பர்கள், அநேகம் ஜனஸமூகங்களாலே பொறுக்கி எடுக்கப்பட்டவர்களாயும், ஜனங்களினுடைய பிரதிநிதிகளாயும் இருப்பவர்கள். இப்படித் தேர்ந்தெடுக்கும் ஜனஸமூக ஸ்தானங்களுக்கு 'எலக்டோரேட்' என்றும், அந்த ஸ்தானங்களில் உள்ளவர்களுக்கு 'எலக்டார்கள்' என்றும் பெயர். இந்த எலக்டோரேட் ஆகிய ஸ்தானங்களில், உழுது பயிரிடுவோரும், கூலிவேலை செய்பவரும், வியாபாரம் செய்பவரும், உத்தியோகஸ்தினரும் ஆகிய நானாவித ஜனங்களின் பிரதிநிதிகள் மெம்பர்களாக இருப்பார். தவிரவும், சென்னை ராஜதானியில் உள்ள பிராமணரல்லாதவர்களுக்கும் பம்பாய் ராஜதானியில் உள்ள மகாராஷ்டிரர்களுக்கும், பஞ்ஜாபிலுள்ள சீக்கிய ஜாதியார்களுக்கும் மகம்மதியருக்கு ஏற்பட்டிருப்பதுபோல் பிரத்தியேகமாய் ஒவ்வொரு எலக்டோரேட் ஏற்படுத்தப்பட்டு இருக்கிறது. இவ்விதம் பிரத்தியேகமாயுள்ள எலக்டோரேட்டுகளிலிருந்து, அந்தந்த ஜாதியார்கள், தங்கள் தங்களுக்குள்ள காரியாகாரியங்களைக் கவனிக்கப் பிரதிநிதிகள் ஏற்படுத்திக்கொள்ளக்கூடும்.

மேற்சொல்லிய பிரகாரம் ஜனங்களுக்கு அநுகூலமாயுள்ள எலக்டோரேட்டுகளை ஏராளமாய் ஏற்படுத்தி, அவ்வெலக்டோரேட்டுகளிலும், நானாவித ஜாதி வருணாசிரமத்தாரையும், பலபல தொழிலாளிகளையும், வர்த்தகர்களையும் வியாபாரிகளையும் எலக்டார்களாகும்படிச் செய்து, ஒவ்வொரு மாகாணச் சட்ட சபைகளில் இவ்வெலக்டார்களால் ஏற்படுத்தப்பட்ட பிரதிநிதிகள் மெம்பர்களாகி, அம்மெம்பர்களும் அதிகப்பட்டு நிராக்ஷேபணையாய் மெஜாரிடியாகவே இருந்துவர இடம் இருப்பதினாலேயும், மாகாணச்சட்ட சபைகளில் ஸர்க்கார் உத்தியோகஸ்தினரும், ஸர்க்காரால் நேமிக்கப்பட்டவர்களுமாகவே இதுவரையில் இருந்த ஸ்திதி முற்றும் மாறி, அச்சபைகள் நாட்டார்கள் சபைகளாகவே ஆகிறதினாலேயும், நம்தேசத்திற்கு அடுத்த வருஷம் முதல், அமுலுக்குவரும் நூதனச்சட்டம், நமக்கு மிகவும் மூலாதார ஸாதனம் என்பதற்கு எள்ளளவும் ஐயமில்லை.

'சட்டநிர்மாண ஸபையில் ஜனங்களால் ஏற்படுத்தப்படும் மெம்பர்களே மெஜாரிடியாய் இருப்பதினாலே, நம்தேச அரசாக்ஷி எந்த ஸ்திதிக்கு வரக்கூடும்' என்பதைப்பற்றியும் 'அப்படியுள்ள மெஜாரிடி மெம்பர்களாலே ராஜ்ஜியத்திற்கு என்ன நன்மை விளையக்கூடியது' என்பதைப்பற்றியும் யோசித்துப்பார்த்தால், (1) இனிமேல், ஜனங்களுடைய சுகாசுகங்களைப் பற்றிப் பிறப்பிக்கும் சட்டங்கள் இதுகாறும் இருந்தவைபோல் ஸர்க்கார் உத்தியோகஸ்தர்கள் இஷ்டத்திற்குத் தக்கபடி ஏற்படப்போவதில்லை, (2) அச்சட்டங்கள், மகா ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரதிநிதிகள் இஷ்டப்படிக்குத்தான் ஏற்படக்கூடியவைகள், (3) அன்னவர் ஏற்படுத்தும் சட்டங்களும், தங்களை மெம்பர்களாய்ப் பொறுக்கி எடுத்த ஜனங்களின் நன

மையை நாடியே இருக்கும், (4) அங்கத்தினர் அப்பிரதிநிதிகள், தங்கள் இஷ்டம்போல் சட்டம் ஏற்படுத்தி, ஜனங்களுக்கு நன்மை உண்டாக்காவிட்டால், அவர்கள் ஸர்வ ஜன விரோதிகளாய், மறுபடி-யும் சட்டசபைக்கு மெம்பர்களாய்த் தேர்ந்து எடுக்கப்படமாட்டார்கள், என்கிற இந்த நான்கு விஷயங்களும் புலப்படும். இதுதான் நூதனச் சட்டத்தினால் உண்டாகக்கூடிய புதிய ஸக்தி. ஆகவே இந்த ஸக்தி இந்தியாவுக்கு எவ்வளவு மேன்மை! எவ்வளவு நன்மை!!

இதுமாத்திரமல்ல, சட்ட சபைக்கு இதுவரையில் மாகாணக் கவர்னரே அக்கிராஸனாதிபதியாக இருந்தார். நூதனச் சட்டத்தினால் அவருக்கு அந்த அக்கிராஸனாதிபத்தியம் போய்விட்டது. இனிமேல், இச்சட்டம் அனுஷ்டானத்திற்கு வந்து, முதல் நான்கு வருஷம் வரையில் கவர்னரால் நேமிக்கப்படும் ஒருவர், சட்டசபைக்கு அக்கிராஸனாதிபதியாய் இருந்து வருவார். அப்படி நான்கு வருடங்களான பின்பு, இங்கிலாந்தில் ஹௌஸ் ஆப் காமன்ஸ் என்று வழங்கும் பார்லிமெண்டு மகாசபையில் நடந்துவரும் வழக்கம்போல், இந்தியாவிலும் சட்ட நிர்மாண சபைக்கும், அச்சபையிலுள்ள மெம்பர்களே தங்களில் ஒருவரை அக்கிராஸனாதிபதியாக நேமித்துக்கொள்ளப்போகிறார்கள். ஆனால் அவ்வித நேமகம், கவர்னரால் அங்கீகரிக்கப்படவேண்டும்.

சட்டசபைக்கு அக்கிராசனாதிபதியை முதல் நான்கு வருஷம் வரையில் நேமிப்பதற்கு கவர்னருக்கு அதிகாரம் நூதன ஆக்டில் கொடுத்திருப்பது எதற்காக? ஏன் அந்த ஆக்டில் ஆதிமுதற்கொண்டே சட்டசபையார்கள் தங்களில் ஒருவனை, தங்களுக்கு அக்கிராசனாதிபதியாய் நேமித்துக்கொள்ளக்கூடாது? என்பீர்களாகில், ஒரு சபையில் அக்கிராசனாதிபத்தியம் வகிப்பது அல்பசொல்பமான காரியமல்ல. ஏனெனில், அடுத்த வருஷம் முதல் ஏற்படப்போகிற நூதனச் சட்ட சபைகளில் மெம்பர்கள் அதிகமாகி, அவைகள் பெரிய சபைகளாயிருப்பதால், அச்சபையை ஒழுங்குபெறச் சரியாய் நடத்தவும், அச்சபையில் நேரிடக்கூடிய வாக்குவாதங்களைத் தீர்த்துச் சீர்படுத்தவும், மெம்பர்கள் பேசுங்காலத்து முறை பிறழ்வாய் மரியாதை தப்பிப்பேச இடம் கொடுக்காமல், சபையை நடத்தி வருவது சிரமமான காரியமல்லவா? ஆகவே, அச்சட்ட சபைக்கு அக்கிராசனாதிபதியாய் இருப்பவர் சபையை நடத்திவருவதில் அநுபவம் மேவிட்டவராயும் பதட்டமின்றி விஷயங்களைச் செவ்வனே கவனிக்கக்கூடியவராயும், மனக்கலக்கமில்லாமல் ஸதிர புத்தியுள்ளவராயும், ஏதாகிலும் ஒழுங்கு தவறினால், அந்த க்ஷணத்துக்குடனே சரிப்படுத்தச் சக்தியுள்ளவராயும், அனாவசியமான பேச்சுவார்த்தைகளுக்கும், வாக்குவாதங்களுக்கும் சட்டசபையில் மெம்பர்களுக்கு இடம் கொடாமல் பார்த்துவரத் திறமை உள்ளவராயும், இருப்பது அவசியமல்லவோ? நூதன ஆக்டுப்படி சட்டசபை ஏற்பட்டு, முதல் நான்கு வருஷத்திற்குள், மெம்பர்களுக்கு அச்சபையை நடத்திவருவதில் அநுபவம் மிகுமாகையினாலே, அந்நான்கு வரு

ஷத்திற்குப்பின், சபையோர்களிலிருந்து அக்கிராசனாதிபத்தியம் நிர்வகிக்க யோக்கியதை உள்ளவர் ஏற்படக்கூடும்.

ஆந்தாண்டு வருஷங்களுக்குப்பின் சபையோர்களால் நியமிக்கப்படும் அக்கிராசனாதிபதியை கவர்னர் அங்கீகாரம் செய்யவேண்டுவது யாது காரணம்பற்றி என்று கேட்டால், அதற்குப்பதில் லகுவாய்ச்சொல்லிவிடலாம் அதாவது, அரசாக்ஷி சரிவர நடந்தேறுவதற்கு ஜவாப்பு சொல்லக் கடமைப்பட்டவர், கடைசி முடிவில் கவர்னரேயாம் அவர் சட்டசபையை மேன்பார்வை பார்த்துவருபவர் ஆகையினாலேதான், அவருக்கு, சபையோர் நேமிக்கும் அக்கிராசனாதிபதியை அங்கீகரிக்க அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது சட்டப்படி அவ்வதிகாரம் கவர்னருக்குக் கிடைத்திருந்தாலும், அவர் சபையோர் விருப்பத்திற்கு மாறாய், அவர்கள் நேமிக்கும் அக்கிராசனாதிபதியை அநேகமாய் அங்கீகாரம் செய்யாமல் போகமாட்டார் என்பது திண்ணம் வெகு காலமாய் நமக்கு உண்டாயிருக்கும் அனுபவத்தாலே, அவர் சபையோர் மனதுப்படியே நடப்பார் என்று நாம் நிச்சயமாய் நம்பியிருக்கலாம் உதாரணமாக, சென்ற 27 வருஷமாய், இந்தியாவின் சட்ட சபையைக்குறித்து ஏற்பட்டிருக்கிற ஆக்டின்படி சட்ட சபைக்கு, சில ஜனசமூகங்களினால் தேர்ந்தெடுத்து மெம்பர்களாய் நேமிக்கப்பட்டவர்களை, கவர்னரும், அவருடன் சேர்ந்த நிர்வாகசபையாரும் அங்கீகரிக்கவேண்டுவது சட்டமாக வழங்கி வந்தாலும் இத்தனை வருஷங்களில், கவர்னர் அவ்வதிகாரத்தைக்கொண்டு, அம்மெம்பர்களில் ஒருவரையாகிலும் அங்கீகாரம் செய்யாமலிருந்ததே இல்லை அவரும், அவருடன் சேர்ந்த நிர்வாகசபையாரும், மேற்சொல்லிய ஜனசமூகங்களின் எலக்டார்களால் நேமிக்கப்பட்ட மெம்பர்கள் யாவரையும், ஒரேமாதிரியாகத்தான் அங்கீகரித்து வந்திருக்கின்றனர் ஆகவே, இந்தியா ஆக்டின்படி ஏற்பட்ட நூதனச் சீர்திருத்தங்களாலே மாகாணச் சட்ட சபைகளில் ஜனங்களுக்கு எங்ஙனம் ஆதிபத்தியம் மிகுந்து, தங்கள் நன்மைக்காக தாங்களே சட்டதிட்டங்கள் ஏற்படுத்திக்கொள்ள, இவ்வளவு தூரம் இடம் உண்டாகிவிட்டது என்பதை இதுகாறும் விளக்கிச் சொல்லிவந்தேன்

இதற்குமேல், சொல்லப்போவதாவது, மாகாண அரசாக்ஷியை வாஸ்தவமாய் கைக்கொண்டு வரும் நிர்வாக சபையார் செய்யும் காரியா காரியங்களை மாகாணச் சட்டசபையார் பரிசீலனை செய்துபார்க்க அதிகாரம், இந்நூதன ஆக்டால் ஏற்பட்டிருக்கிறது இது சம்பந்தமாய் இந்த ஆக்டில் மூலாதாரமான விசேஷ மாறுதல் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது .

இதுவரையிலும், மாகாணச்சட்ட சபை, ஸர்க்காருக்கு ஆலோசனை மாத்திரம் சொல்லக்கூடிய உரிமையடைந்திருந்ததே தவிர வேறுவித அதிகாரம் அடைந்ததில்லை அந்த ஆலோசனைப்படி சர்க்கார் நடக்கவேண்டியதுமில்லை சர்க்கார் இஷ்டப்படி ராஜ்ஜியத்தை நடத்திவரக்கூடும் ஆனால், இந்தியாவில் சீர்திருத்த விஷயமாய் பார்லிமெண்டார் ஏற்படுத்தியுள்ள நூதன ஆக்டின்படி சட்டசபைகள் கேவலம் யோசனை மாத்திரம் சொல்லும்முறைமையிலிருந்து போய், மேலஸ்திதியைப்பெற்று, ராஜாங்கம் நிர்வகிப்பதில் ராஜ

காரியங்கள் இன்ன இன்னபடிக்குத்தான் நடக்கவேண்டும் என்று கட்டளையிட்டு விதிக்கும் அதிகாரமும் ஒருவாறு சட்டசபையாருக்கு கிடைத்திருக்கின்றது.

அவ்வித மாறுதலும், அதினால் அதிகாரமும் சட்ட ஸபைக்கு ஒருவாறு வந்திருப்பது எப்படியெனில், மாகாணத் தலைவராயுள்ள கவர்னர், இனிமேல் நூதன ஆக்டின் பிரகாரம், சில மந்திரிமார்களை நியமிப்பார். அம்மந்திரிகள், அவர் நிர்வாக ஸபையில் உள்ள மெம்பர்கள் அல்லர். இந்த விதமான ஸர்க்கார் உத்தியோகஸ்தரும் அல்லர். வித்தியை, சுகாதாரம், கலால் முதலான சில ராஜாங்க விஷயங்களைப் பரிபாலித்து வருவது அம்மந்திரிகளின் கடமை. அவர்களுக்கு அங்ஙனம் செய்துவர அதிகாரமும் உண்டாயிருக்கிறது. ராஜ்ய பரிபாலனத்தில் ஏற்படும் விஷயங்கள் இரண்டு பாகமாகவும் பிரிபட்டுள்ளன. மேற்குறித்தபடி மந்திரிகள் அதிகாரத்திற்குள்பட்ட விஷயங்கள் ஒருவகை. இவைகளுக்கு மாற்றப்பட்ட விஷயங்கள் என்று பெயர். இவைகள் அல்லாத பாக்கி விஷயங்கள் ஸர்க்காராலே நேரில் கவனிக்கப்பட்டவைகள். அவைகளுக்கு 'ஸர்க்கார் நேர்பார்வையில் உள்ள விஷயங்கள்' என்று பெயர். 'மாற்றப்பட்ட விஷயங்கள்' என்று பெயர் பெறுவானேன் என்றால், இதுவரையில் ஸர்க்கார் முகத்தாவில் பார்த்துவந்திருந்தது மாறி மந்திரிமார்களாலே இனி பார்த்துவரப் போகிறவைகள். "ஸர்க்கார் முகத்தாவில் பார்த்துவரும் விஷயங்கள்" என்று கவர்னரும், அவருடன் கலந்த நிர்வாக ஸபையாரும் பார்த்து வருபவைகளாம். மந்திரிமார்களை ஒவ்வொரு மாகாணத்திலும் கவர்னர் அவர்கள் நேமிப்பார் ஆயினும், அவர்கள் நேமிக்கப்பட்ட ஆறு மாதத்திற்குள்ளாக, மாகாணச்சட்ட ஸபை மெம்பராக அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அதாவது, மந்திரிகளை நேமிக்கும் அதிகாரம் கவர்னருக்கு. அவர்களை அங்கீகாரம் செய்யும் அதிகாரமோ சட்டஸபையிலுள்ள மெம்பர்களுக்கு உண்டு. அச்சட்டஸபையில் 100க்கு 70 பேர் ஜனஸமூகங்களாலே தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். ஆகையால், மந்திரிமார்களை கவர்னர் நேமித்தாலும், அம்மந்திரிகள் ஜனங்களிடத்தில் விசுவாஸமுள்ளவர்களாய், அவர்களுடைய நன்மையையே கோரி நடந்து வந்தாலொழிய, ஜனங்கள் அபிப்பிராயத்திற்கு மாறுபட்டு நடக்கும் மந்திரிகளை சட்டஸபையில் மெஜாரட்டியாயிருந்து, ஜனங்களுக்கு பிரதிநிதிகளாகியும் உள்ள மெம்பர்கள் அங்கீகரிக்க மாட்டார்கள் என்பது ஸ்வதஸ்ஸித்தமாய் ஏற்படும். இங்ஙனம் நேமிக்கப்படும் மந்திரிகள்தான் "மாற்றப்பட்ட ராஜாங்க விஷயங்களை பரிபாலிக்கப் போகின்றனர். கவர்னரும் அவ்விஷயங்களில் மந்திரிகள் ஆலோசனையைக் கொண்டு நடப்பவராகும். அவர்கள் யோசனைப்படி கவர்னர் நடக்காமல் போனால், தனக்கு எப்படி யுக்தமோ அப்படிக்கு அவர் செய்யலாகும். அப்போது மந்திரிகள் என்ன செய்யக்கூடும் என்றால், கவர்னர் அபிப்பிராயத்திற்கு விரோதமாக தாங்கள் அபிப்பிராயம் வகிப்பதால் தங்கள் மனோதர்மப்படி தங்கள் ஸ்வதந்திரத்தை விட்டுவிடாமல் தாங்கள் சட்டஸபையிலும் மெம்பராயும் மந்திரியாயும் இருப்பது

அகௌரவம் என்று தங்கள் மந்திரித்துவத்தை ராஜீனாமாக் கொடுத்து விடலாகும். இல்லாமற்போனால் தங்கள் ஸ்வாதந்திரியத்தை விட்டு விட்டு, கவர்னர் அபிப்பிராயத்தை ஒட்டியே நடந்துகொண்டு மந்திரிகளாய்க் காலந்தள்ளிவரலாகும். இங்ஙனம் காலந்தள்ளி மந்திரிகள் வருவதானால், அவர்களிடத்தில் சட்ட சபையில் உள்ள மெஜாரிடி மெம்பர்களுக்குக் கெட்ட எண்ணம் ஜனித்து, அவர்கள் ஜனங்களுக்குப் பிரதிநிதிகளாயிருந்து வருபவர் ஆகையால் கவர்னர் சொற்படி தாழ்மை நிலைமைபெற்று நடக்கும் அம்மந்திரிகளைப் பலவிதத்தாலும் ராஜீனாமா கொடுத்து விடும்படிச் செய்துவிடுவார்கள். இங்ஙனம் ராஜீனாமாக் கொடுத்துவிடும் மந்திரிகள் சபையாரால் வேலையினின்றும் நீக்கப்பட்டவர்போல் ஆகிவிடுவர். ஆகவே, இந்திய சீர்திருத்த விஷயமாய்ப் பிறப்பிக்கப்பட்ட நூதன ஆக்டானது இந்தியர்களுக்குத் தங்கள் தேச அரசாக்ஷியில் எவ்வளவு தூரம் அதிகாரம் உண்டாக்கி, அவ்வரசாக்ஷியும் எவ்வளவு வரையிலும் ஜனங்களுக்கு உத்தரவாதமாய் இருக்கப்போகிறது என்பதை மேல் கூறியதால் விளக்கும்.

அபிப்பிராய பேதத்தினால் கவர்னர் அபிப்பிராயத்தோடு ஒத்து நடக்க மனமின்றி மந்திரிகள் ராஜீனாமா கொடுத்துப்போனால், அம்மந்திரிகளால் பரிபாலிக்கப்பட்டுவந்த மாற்றப்பட்ட ராஜாங்க காரியங்களைப் பார்க்க, தக்க ஏற்பாடுகள் ஸ்வல்பகாலத்திற்கு மாத்திரம் செய்துவர இந்நூதன ஆக்டால் கவர்னருக்கு அதிகாரம் ஏற்பட்டு அதற்குத் தகுந்தபடி நிபந்தனைகளும் இருக்கின்றன. அதாவது, மந்திரிமார் ராஜீனாமா கொடுத்து, வேறு மந்திரி கவர்னரால் நேமிக்கப்பட்டு அந்நேமகமும் சட்டசபையாரால் அங்கீகாரம் பெறும் வரையில், கவர்னர் அம்மாதிரி மாற்றப்பட்ட ராஜகாரியங்களைப் பரிபாலித்துவர ஏற்பாடு செய்யலாகும்.

ஆகவே, ஒரு மாகாணத்தில் மந்திரிகளாய் ஏற்படுத்தப்படுபவர்கள் அம்மாகாணச் சட்டஸபை மெம்பர்களாகிய, ஜனங்களுடைய பிரதிநிதிகளின் இஷ்டப்படி நடந்துவரவும் அவர்கள் அங்ஙனம் நடவாவிடில், ஜனப் பிரதிநிதிகளாகிய அச்சட்டசபை மெம்பர்களாலேயே அவர்கள் மந்திரித்துவத்தினின்றும் பாத்தருப்பு பண்ணப்படுவார்கள் என்பதும் உங்களுக்கு இப்பொழுது நன்கு விளங்கும்.

ஆனதுபற்றியே, இந்திய நூதன ஆக்டானது, மாகாணச்சட்ட ஸபையாரும், ராஜாங்கத்தை வகிக்கும் நிர்வாக ஸபையாரும், பரஸ்பரம் ஜனங்களுக்கு உத்திரவாதிகளாய் இருக்கும்படி மூலாதாரமாக ஏற்பட்டிருக்கிறது. அந்த ஆக்டினால், மாற்றப்பட்ட ராஜகாரியங்களில் மாத்திரம், தற்காலம் ஜனங்களுக்கு ஸ்வய ஆக்ஷி கிடைத்து, அவ்வாக்ஷியும் அவர்களுக்கு உத்தரவாதமாய் இருந்துவர, அதிகாரம் கிடைத்திருக்கிறது. இது முதற்கொண்டு, புதிதாய் ஏற்படும் சட்டஸபைகள் தங்கள் காரியங்களை ஒழுங்குபெற நடத்தி, ராஜ்ஜியானுபவம் மிகுந்துவரும்பொழுது, ராஜாங்க ஸம்பந்தமாயுள்ள எல்லாக் காரியங்களையுமே ஜனங்கள் வகிக்கத் தலைப்பட்டு, ஜனங்களுக்கு ஸ்வராஜ்ஜியாதிபத்தியம் பூராவும் கிடைத்து, ஜனங்களே தங்கள் அரசாக்ஷிக்கு உத்தரவாதிகளாய் இருக்க நேர்ந்துவிடும் என்பதற்குக் கொஞ்சமேனும் ஐயம் வேண்டுவதில்லை.

# 7-ம் அத்தியாயம்.

## மாகாண நிர்வாகஸபையில் சீர்திருத்தம்.

இந்திய நூதன ஆக்டினால் மாகாணக் கவர்னரைக் குறித்தும் அவருடன்கூடிய நிர்வாக ஸபையைக்குறித்தும் மாகாணச் சட்ட ஸபையார்களுக்கு உள்ள அதிகாரம் எங்ஙனம் அதிகப்படுத்தப் பட்டு இருக்கிறது என்பதை இப்பொழுது கவனிப்போம். கவர்னர் செய்ய வேண்டிய பிரதானமான வேலையாவது, ஜனங்களிடமிருந்து வசூலாகும் வரித்தொகையை சோதித்து வரி செலுத்துவோர் நன்மைக்காக அத்தொகையை செலவழிக்க வழிதேடவேண்டியதாகும். இதுவரையிலும் சர்க்கார் ஜனங்களுடைய நன்மைக்காக அவர்களிடமிருந்து வரிவசூல் செய்து வந்தபோதிலும், அவ்வரி எவ்விதம் வசூல் செய்யப்படவேண்டும் என்பதையாவது, அவ்வரி எங்ஙனம் தங்களுக்கு அநுகூலப்படும்படி உபயோகப்படுத்தவேண்டும் என்பதையாவது கேட்க ஜனங்களுக்கு அதிகாரம் தற்கால ஆக்ஷியில் கிடையாது. ஜனங்களுக்கு உத்திரவாதமாயிருக்கும் ராஜாங்கத்திலோ ஜனங்களுடைய சம்மதியில்லாமலாவது, ஜனங்களைக் கேட்காமலாவது வரி ஏற்படுத்தமுடியாது. அதாவது, இனிமேல் ஏற்படும் அரசாக்ஷியில் ஜனங்களுக்குத் தாங்கள் நேமிக்கும் பிரதிநிதிகள் மூலமாய் ராஜ்ஜியத்திற்குள்ள வரவு செலவையும் கணக்குப்பார்த்து அவர்கள் உத்திரவின் படித்தான் வரவுசெலவு செய்யக்கூடும்.

அங்ஙனம் செய்ய ஜனங்களுக்கு அதிகாரம் கிடைத்திருக்கிறது. ஆனால் தற்காலத்திலோ, மாகாணச் சட்டஸபையிலுள்ள மெம்பர்களுக்கு அவ்வித அதிகாரம் கிடையாது. அவர்களுக்குத் தங்கள் மாகாணத்திற்குரிய வருஷவாரி வரவு செலவு கணக்கைப்பற்றி சபையில் ஆக்ஷேபணை சமாதானம் சொல்லிக்கொண்டு வெறும் பேச்சுத்தான் பேசக்கூடும். சட்ட ஸபைக்கு இவ்வளவு செலவு போதும் போதாது என்று வோட்டுமூலமாய்த் தீர்மானிக்க இடமே கிடையாது. இங்ஙனமிருப்பதை இந்திய நூதன ஆக்டானது முற்றிலும் மாற்றிவிட்டது. இந்த ஆக்டால் மாகாணத்திற்கு வருஷா வருஷம் ஏற்படும் வரவுசெலவு ஜாப்தாவை அங்கீகரிக்கவும், அல்லது அது சரியானபடி இல்லை என்று தள்ளிவிடவும், சட்டஸபையாருக்கு அதிகாரம் கிடைத்திருக்கின்றது. இதுவும் தவிர, வரவு செலவு மொத்தத்தையுமே ஒப்புக்கொள்ளாமல் அவைகளை மொத்தத்திலாகிலும் அல்லது ஏதாவது ஒரு பாகத்திலாகிலும் குறைத்து விடும்படிக்குள்ள அதிகாரமும் அச்சட்டஸபையாருக்கு கொடுக்கப் பட்டிருக்கிறது.

ஆயினும் இங்ஙனம் சட்டஸபையார் செலுத்தும் அதிகாரம் நிறைவேறுவதற்கு ஒரு தடங்கல் இருப்பது வாஸ்தவம்தான். அத் தடங்கலாவது, மாகாணத்தலைவராயுள்ள கவர்னர் சட்ட ஸபையார் ஏற்படுத்தும் தீர்மானத்தை நிராகரித்து, அதை அமுலுக்கு வர வொட்டாமல் தடுத்துவைக்க அதிகாரம் இந்திய நூதன ஆக்டால்

அவர்களுக்குக் கொடுபட்டிருக்கிறது. சட்டங்கள் ஏற்பட்டு அச்சட்டங்களின்படி அரசாக்ஷி நடத்தப்பட்டுவரும் ராஜ்ஜியங்களில், அவ்விராஜ்ஜியாதிபத்தியம் வகிக்கும் தலைவர்களுக்குச் சாதாரணமாய்ச் சில அசந்தர்ப்பங்களில் இவ்விதமாய்த் தடைசெய்ய அதிகாரம் இருக்கிறது ஸகஜமே. மாகாண கவர்னருக்கு இருக்கப்பட்ட மேற்சொல்லிய அதிகாரமும் அத்தன்மைத்தே. ராஜாங்கத்திற்கு அதிபதியாய் இருப்பவரே முடிவில் ராஜ்ஜியாதிபத்திய விஷயங்களில் உத்திரவாதியாக இருக்கக் கடமைப்பட்டவர் ஆகையாலே, சட்ட ஸபையார் ஏதாகிலும் சரிதப்பான தீர்மானங்களை உண்டாக்கி விட்டால், அவைகளை நிறைவேற்றவொட்டாமல் நிறுத்தி வைப்பதற்காக அப்படி தடைபண்ணும் அதிகாரம், ராஜாங்க ஸம்ரக்ஷணத்தின் பொருட்டு, காப்பாக கவர்னருக்குக் கொடுபட்டிருக்கிறது. உத்தரவாதமாயுள்ள அரசாக்ஷி வெகுகாலமாய் நடைபெறும் ராஜ்ஜியங்களில் இத்தன்மையான அதிகாரம் செலுத்தப்பட்டு வருகிறதா? என்று பார்ப்போமாகில் விசேஷமாய் பிரித்தானியா தேசத்தில் கூட இவ்வித அதிகாரம் நடைபெற்றுவருகிறது என்பதைத் தெரிந்துகொள்ளக் கூடும். அவ்வதிகாரம் சட்ட புஸ்தகத்தில் எழுதப்பட்டுள்ளதாயினும் அது நடவடிக்கையில் அமுலில் செலுத்தப்படுவதில்லை. அப்படி, அடிக்கடி அவ்வித அதிகாரம் செலுத்தப்பட்டால் ராஜ்ஜியத்திற்கு அநேக விதமான இடையூறுகளுக்கு இடமுண்டாகிவிடும். ஆனது பற்றி அவ்வித அதிகாரம் சட்டபுஸ்தகத்தில் எழுதிவைக்கப்பட்டிருக்கிறது மாத்திரமே ஒழிய, அநுஷ்டானத்திற்கு வெகுகாலம் கொண்டுவரப்படாமல் நின்று நிஷ்பலமாய்ப்போய்விடும். ஸ்வராஜ்ஜியம் நடைபெறும் எல்லா தேசங்களிலும் கூட இவ்விதமான அதிகாரம் தேச ஸம்ரக்ஷணத்திற்கு அத்தியாவசியம் என்று நினைத்தே, இப்பேர்ப்பட்ட சட்டம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. மேலும், நூதனமாய் ஏற்படும் சட்டஸபைகள், தங்கள் காரியங்களைச் சரிவர நடத்தி, அநுபவம் மிகும்வரையில், அவ்வித அதிகாரம் இருந்தேதீரவேண்டும் என்பது அத்தியாவசியமே.

நூதன ஆக்டினால் மாகாண அரசாக்ஷியில் இன்னமும் சில சீர்திருத்தங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவைகளைப் பற்றி இப்பொழுது சொல்லுகிறேன்.

1910-ம் வருஷம் வரையில் மாகாண கவர்ன்மெண்டு நடத்துவதற்கு மூன்றே மூன்று பேர்தான் உண்டு. அவர்கள், கவர்னரும், இந்திய ஸிவில் ஸர்விஸைச் சேர்ந்த இதர இரு மெம்பர்களுமாம். இவ்விருவரும் தான் கவர்னருடைய ஸபைக்கு மெம்பர்களானவர். 1910-ம் வருஷத்தில் இவ்விருவருடன், இன்னம் ஒரு இந்தியரும் நிர்வாக சபைக்கு மெம்பராயினர். ஆகவே, தற்காலத்தில் மாகாண நிர்வாக ஸபையில் நால்வர் உளர். அவர்களில் மூவர் ஐரோப்பிய உத்தியோகஸ்தரும், மற்ற ஒருவர் மாத்திரம் இந்திய உத்தியோகஸ்தருமாம்.

இந்திய நூதன ஆக்டால் அந்த நிர்வாக ஸபையில் இந்திய மெம்பர்கள் அதிகமாக்கப்பட்டிருக்கின்றனர். எப்படியெனில் இதுவரையில், இரண்டு பேர் இந்தியா ஸிவில் ஸர்விஸ் உத்தியோகஸ்தினராயிருந்தது மாறிப்போய், இனிமேல் அந்த நிர்வாக ஸபையில் ஒருவரோ ஒருவர்தான் அப்படி இந்திய ஸிவில் ஸர்விஸ் உத்,

யோகததிலிருநது மெமபராக வரககூடியவா ஆகவே பாககி இரணடு நபாகளையும, இநதியாகளாகவே ஸாககாா நேமிகக இடமுணடு.

ஜாயினடு பாாலிமெணடாி கமிடடியாா இநதியா ஸமபநதமாய ஏறகனவே சொலலியிருககபபடட சிபாாசில, இநதிய மெமபாகளை நிாவாக ஸபையில அதிகபபடுததுமபடியாக, ஒரு நிபநதனையைப புதிதாய ஏறபடுததவேணடும எனறனா தறகாலததில அநுஷடானததிலுளள ஆகடினபடி, மாகாண நிாவாக ஸபையில மெமபாகள நாலவருககதிகம இருககககூடாது இநத நிபநதனை புதிய ஆகடால மாறுபடாவிடடாலும, ஜாயிணடு பாாலிமெணடாி கமிடடியாா செயதிருககும சிபாாசில, மாகாண நிாவாக ஸபையில, பொதுவாக, கவானரைததவிர, இரணடு நபருககுமேல இருககவேணடுவதிலலை எனறும, அவவிருவாில ஒருவா இநதிய ஸிவில ஸாவிஸைச சோநத உததியோகஸதராயிருநதுவரவேணடும எனறும, எபபோதாகிலும அநநிாவாக ஸபை நானகு மெமபாகள அடஙகி இருகக நோநதால, அபபொழுது கவானரையும சோதது இருவாதான உததியோகஸதராயிருககவேணடுமெனறும, மறற இருவரும, ஸாககாா உததியோகம வகிககாத இநதியாகளாகவே ஏறபடவேணடும எனறும பாாலிமெணடாி கமிடடியாா கூறி இருககினறனா

இநத சிபாாசை, இஙகிலீஷ கவானமெணடாா, அஙகீகாிததிருககிறபடியால மாகாண நிாவாக ஸபையிலும இநதிய மெமபாகள அதிகமாகி, இநதியாகளுககு அதிகாரமும மேலிடுவது, இநதிய நூதன ஆகடால இநதியாவிறகு மிகக லாபம எனபது திணணம.

இபபொழுது, சாதாரணமாய, ஒரு கேளவி கேடகககூடும அதாவது —“மாகாண நிாவாக ஸபையில, இரணடு இநதிய மநதிாிமாாகளை சேரததது, அவாகளைககொணடு மாறறபபடட காாியஙகள” எனகிற ராஜாஙக விஷயஙகளைப பாிபாலிதது வருமபடிககு இநதிய நூதனச சடடததால ஏறபடடு, அரசாஙகமும ஜனஙகளுககு உததரவாதமாய ஏறபடடிருபபது சாியே! இவவிருவாகளும, சடட ஸபையில ஜனஙகளுககுப பிரதிநிதிகளாக விளஙகுவதும சாியே!! இவவிரு மநதிாிமாாகளையும உததியோகததில நிலைததிருககசசெயயவோ, அலலது அவாகளை அவவேலையினினறும பாததருபபுபபணணிவிடவோ, அதிகாரம சடட ஸபையாருககு இருநதுவருகிறது எனறும, அசசடட ஸபையில ஜனஙகளுடைய பிரதிநிதிகள நிஸஸநதேகமாயும நிராகேஷபணையாயும மெஜாரடடியாய இருககிறாாகள எனறு சொலவதும சாியே!!! இபபடியிருகக, “ஜனஙகளுககு ஸவராஜஜியாதிபததியம கிடைததது, அது அவாகளுககு உததரவாதமும சொலலககடமைபபடடிருககிறது அதனால ஜனஙகளுககு ஏராளமான நனமை உணடு” என்று இவவளவெலலாம எடுததுச சொலலிவிடடு, சடட ஸபையாா செயயும தீாமானஙகளையும, மநதிாிமாாகள சொலலும யுகதி ஆலோசனைகளையும கேடடு, “கவானா மாததிரம நடநதுவா நிரபபநதம கிடையாது. அவா, தன மனோபீஷடபபடி ஆணடுவரலாம” எனகிற அதிகாரம இநதிய ஆகடினால கவானருககுக கொடுபபடடிருககிறது எனறு சொலலிவிடுவதினாலே, இவவளவு தூரம ஜனஙகளுககு இந

நூதன ஆக்ட்டால் வெகு லாபம் கொடுத்திருப்பதுபோல் கூறிவந்ததெல்லாம் பொய்யாய்ப்போய், கொடுத்ததையும் பிடுங்கிக்கொண்டு ஆக்ட்டும் நிஷ்பலனுயத்தானே ஆகிவிடுகிறது என்று சாதாரணமாய் யாவரும் கேட்கலாகும்.

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல ஆரம்பிக்கும்போது, இந் நூதன ஆக்ட்டில் கவர்னருக்கு அவ்வித அதிகாரமுண்டு என்பதை நான் மறுதளிக்கவில்லை. அதை நான் ஒப்புக்கொண்டே உங்களுக்கு திருப்திகரமாய்ப் பதில் சொல்லுகிறேன்.

இந்திய நூதன ஆக்டு, இவ்வித அதிகாரத்தை கவர்னருக்கு கொடுத்திருப்பதற்குக் காரணம் என்ன? என்பதையும், அவ்வதிகாரத்தினால், அதே ஆக்டால் ஜனங்களுக்குக் கிடைத்திருக்கும் அ சாக்ஷியினால் வரக்கூடிய அநுகூலம் வாஸ்தவமாய்க் குறைந்துபோய் விடுகிறதா? என்பதையும், நாம் குரோதமின்றிப் பதறாமல் சிந்தித்துப்பார்க்கவேண்டும்.

ஜனங்களுக்கு உத்தரவு தம் சொல்லுக்கடங்கப்பட்ட ராஜாங்கங்களின் சரித்திரத்தைப் படித்து விசாரிக்குமளவில் இவ்விதமான அதிகாரம் ராஜ்ஜியத்தில் தலைவராக இருக்கும் ஒவ்வொருவருக்கும் இருந்து வருகிறது என்பது யாவரும் தெரிந்துகொள்ளலாகும். அது ஒன்றும் புதுமையல்ல. அமெரிக்காவிலுள்ள ஐக்கிய மாகாணத்தில் நடைபெறும் ராஜாங்கம் ஜனங்களாலேயே, ஜனங்கள் ஸௌகரியத்திற்காகவே ஏற்படுத்தப்பட்டது என்பதும் ஜனங்களுக்கே உத்தரவாதம் சொல்லக்கூடியதாயும் இருந்துவருகிறது என்பதும் யாவருக்கும் தெரியாத விஷயமல்லவே! அவ்வைக்கிய மாகாணங்களின் சரித்திரத்தையே உதாரணத்திற்காக எடுத்துப்பார்ப்போம். அ ராஜாங்கத்தையே, ஜனங்களுடைய சுயேச்சையையும், அவர்கள் உரிமைகளையும் பாதுகாத்துவரும் குடியரசு என்று மேன்மையாய் தூக்கிடுவதில்லையா? அப்படிப்பட்ட தேசத்திலே, அமெரிக்கர்கள் ராஜாங்க ஏற்பாடுகளை முதன் முதலாயச்செய்யும்போது, ஜனங்களுடைய அதிகாரத்திற்கு அநேகம் வரம்புகட்டி அவ்வதிகாரம் முற்றிலும் நிறைவேறும்வண்ணம் அநேகவித நிபந்தனைகளை ஏற்படுத்தினார். இதைப்பற்றி தற்காலத்தில் அவ்வைக்கிய மாகாணங்களுக்குப் பிரஸிடெண்டான ‘டாக்டர் வுட்ரோ வில்ஸன்’ என்பவர், “ஐக்கிய மாகாணங்களுக்கு ராஜாங்கம் அமைப்பு ஏற்படுத்திக்கும்போது அவ்விராஜாங்கம் ஜனங்களாலேயே முற்றிலும் நடத்தப்பட்டு வரவேண்டும் என்கிற எண்ணத்துடன் அவ்விராஜாங்க முறை ஏற்படுத்தப்படவில்லை” என்றும், “ஜனங்கள் ஏகமாய் மெஜாரிட்டியாய் இருந்து, இதர மைனாரிட்டியிருப்பவர்களுக்கு உண்டாக்கக்கூடும் அக்கிரமங்களை அடியோடு தவிர்த்துவிடுவதற்காகவே அவ்வித நிபந்தனைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன” என்றும் கூறியிருக்கின்றனர். அமெரிக்காவில் முதல் முதல் பிரஸிடெண்டாயிருந்தவர் ‘வாஷிங்டன்’ அவரும் இன்னம் சிலரும் சேர்ந்து ஐக்கிய மாகாணங்களுக்கு முதல் முதலில் ராஜாங்க அமைப்பு ஏற்படுத்தினர். அவர்கள் செய்த ராஜ்ஜிய அமைப்பில், ஜனங்களுக்கு ராஜ்ஜிய நிர்வாகத்தில் ஏராளமான அதிகாரங் கொடுக்கப்பட்டிருப்பினும், அவ்வதிகாரங்களுக்கு வரம்புக

அக்கிரம காரியங்களில் பிரவேசிக்கப்படாவண்ணம் அநேக நிபந்தனைகளைச் சட்டத்தில் ஏற்படுத்தினார். இவ்விதமாய்ச் செய்ததினாலே அவர்களை "பழயகாலத்தவர்கள் மேன்மைக்க மனதில்லாத மூடர்" என்றும் தூஷணையாய்க் கூட ஏசலாகிறது. அக்காலத்திலே ஐக்கிய மாகாணங்களின் அரசுமுறை ஆங்ஙனமாயின் இக்காலத்தில் எப்படி என்பீர்களோ? அப்படியேதான் இருக்கிறது. சட்ட பூர்வமாய் பிரஸிடெண்டுக்கு இருக்கும் அதிகாரத்திற்கு சில விஷயங்களில் அளவு ஸங்கியை இல்லை. அவரே ஏகசக்ராதிபதிபோல, தன் மனோபீஷ்டப்படி சில ராஜ்ஜிய காரியங்களை இப்பொழுதும் பரிபாலித்து வரக்கூடும்.

ஆகையினாலே, புகழ்பட்ட பேசப்படும் அமெரிக்காவிலும் கூட ஸ்வராஜ்ஜிய ஏற்பாடுகள் செய்யுங்காலத்தில், "பிரஸிடெண்டுக்கு ஏன் ஏராளமான அதிகாரம் கொடுத்திருக்கவேண்டும்" என்றும், அமெரிக்காவிலே ஏற்படுத்தப்பட்ட சட்டஸபையார் செய்யும் காரியங்களுக்குத் தடை ஏற்படுத்தி, அச்சபையின் ஸ்வாதந்திரியத்தை ஏன் கட்டுக்குள் அடக்கி வைக்கவேண்டும் என்றும் ஆலோசித்துப் பார்க்குமளவில் நாம் தெரிந்துகொள்வதாவது

'ஜனங்களுக்கு உதவியாகவாதலால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் ராஜாங்கம் என்பதினாலே, ராஜாங்கத்தைப் பார்த்துவர உத்தியோகஸ்தர்கள் ஜனங்களாலேயே நேமிக்கப்பட்டு, அந்த ஜனங்களாலேயே வேலையினின்றும் நீக்கப்படுபவர்களாகும். ஜனங்கள் யாவரும் ஒன்றாய்ச்சேர்ந்தே இவ்வித காரியம் செய்வது என்பது இல்லை. ஜனங்களின் சட்டஸபைகளில் தங்களுக்குப் பிரதிநிதிகளாய், தங்களில் சிலரை நேமித்து, அவர்களைக்கொண்டு ராஜ்ஜியத்தில் உத்தியோகஸ்தர்களை நேமிப்பதும், அவர்களை நீக்கிவிடுவதுமாகும். ஆங்ஙனம் ஜனங்களாலேயே நடத்தப்பட்டுவரும் ராஜாங்கத்திலே, ஒருவித அபாயம் நேரிடக்கூடும். அவ்விதம் நேரிடக்கூடிய அபாயத்தைப்பற்றி அமெரிக்காவில் ஸ்வராஜ்ஜியத்திற்கு ஆதாரமாய்ச் சட்டம் நிர்மாணித்தவர்களே எழுதியிருப்பது யாதெனில், ராஜாங்கம் நிலைபெற்று, நீடித்து, நன்றாய் நடைபெறவேண்டும் என்கிற உத்ஸாகம் ஜனங்களுக்கிருப்பதைவிட, ஜனங்களுடைய உரிமைகளை நிலைநாட்டச் சட்டஸபைகளில் போராடுவதுபோல வெளிப்பாவனைகாட்டி, சுயநலம் நாடி முன்னுக்குவரவேண்டும் என்கிற ஆதங்கமே ஜனங்களுக்கு அதிகம் என்று சரித்திரத்தினால் விளங்குகிறது" ஆகவே, அமெரிக்கா போல ஸ்வராஜ்ஜியம் நிலைபெறும் நாடுகளில், ஜனங்கள் மெஜாரிடியாயிருந்து, தங்களோடு சேர இஷ்டமில்லாமல் மைனாரிடியாயிருந்துவரும் இதர ஜனங்களை உபத்திரவம் பண்ணினாலும் பண்ணலாம். அநேகம் தடவை ஜனங்கள் ஒருங்குசேர்ந்து மெஜாரிடியாயிருந்து, தங்களோடு சேராத மைனாரிடியாயிருப்பவர்களை, ஆங்ஙனம் உபத்திரவம் செய்தும் இருக்கிறார்கள். இதைத்தான் "சின்னமீனைப் பெரியமீன் வாயில்போட்டுக்கொள்வது" என்று சொல்லுவார்கள். "ஜனங்களே ஆண்டுவரும் ராஜ்ஜியத்தில், ஆரம்பத்தில் ஜனப்பிரதிநிதிகள் மிகுந்த செங்கோல் செழித்து. முடிவில் அவ்விராஜ்ஜியமே கொடுங்கோல் மன்னர் நாடாகி, "ஆரம்பத்தில் அந்தரங்க மித்திரன். அந்தத்தில்

"அஞ்சாத சத்துரு" என்பதைப்போல், முடிந்துவிடுகிறது. ஆகையினால், மேற்கூறியபடி ராஜ்ஜியத்தில் அக்கிரமம் ஏற்பட்டு அபாயம் நேரிடாதபடி மைனாரிட்டியாயிருப்பவர்களுக்கு அக்கிரமம் நடக்காமல் அடக்கிப் பாதுகாப்பதற்காகவே, ராஜ்ஜியாதிபதியாயிருப்பவருக்கு சட்டத்தில் மேற்சொல்லிய அதிகாரம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது என்று அறிந்துகொள்ளவேண்டும் எந்த ராஜ்ஜியத்தில் ஜனங்கள் மெஜாரிட்டியாயிருந்து அவர்களால் மைனாரிட்டியாயிருக்கும் இதர ஜனங்கள் வதைக்கப்படாமல் தடுப்பதற்குரிய பாதுகாப்பு உண்டோ அந்த தேசம்தான் ஸ்வராஜ்ஜியாதிபத்தியம் வகித்து, சுயேச்சை பெற்ற ராஜ்ஜியம் என்று சொல்லக்கூடும் ஆகவே, ராஜ்ஜியாதிபதிக்கு அதிகாரம் கொடுத்திருப்பதற்கு இப்பொழுது சொல்லி வந்த ஒரு காரணமன்றி இன்னம் வேறு காரணமுமுண்டு அதாவது.—

ஜனங்களே ஆண்டுவரும் ராஜ்ஜியங்களின் சரித்திரங்களைப்படித்துப் பார்க்கும்போது, "சில சமயங்களில் ஜனங்களுக்கு ஒருவகையான பரபரப்பு மேலிட்டு, அவர்கள் ராஜாங்க காரியங்களில் அனுவசியமாய்த் தலையிட்டுக்கொள்ளுகின்றனர்" என்பது வெளிப்பட்டு வருகிறதினாலே, அங்ஙனம் ஜனங்கள் நடந்துகொள்வதை அடக்கிக் கொண்டுவர, ராஜ்ஜியாதிபதிக்கு இந்த அதிகாரம் கொடுபட்டிருக்கிறது இந்த காரணத்தினாலேயே, கனடா ராஜ்ஜியத்திற்கும் ஆரம்பத்தில், ஜனங்களுக்கு உத்தரவாதம் சொல்லும் சக்தியில் இல்லாமல் இருக்கும்படி ராஜாங்க ஏற்பாடுகள் முதல் முதலில் செய்யப்பட்டன

ஆனதுபற்றி, மாகாண அரசாக்ஷியில் ஜனங்களுக்கு அதிகாரங்கள் ஏற்பட்டிருந்தும் இவ்வதிகாரங்கள், மாகாணத் தலைவராயுள்ள கவர்னருக்கு இருக்கும் அதிகாரத்தினாலே, உள்ளடங்கிப் போகக்கூடும் என்கிற காரணத்தைக்கொண்டு மாகாணங்களில் ஜனங்களுக்கு அரசாளும் ஸ்வாதந்திரியம் குறைந்து போய்விட்டதாய் மதிக்கக்கூடாது கவர்னர் தனக்கு கொடுபட்டிருக்கும் இவ்வதிகாரத்தை நலமாகவும், நலம்தப்பியும் செலுத்தக்கூடும் ராஜ்ஜியத்தில் மகா ஜனங்களினுடைய அபிப்பிராயத்திற்கு அநுகுணமாய் அவ்வபிப்பிராயத்தை ஒட்டியே, அபூர்வமாய் கவர்னர், தனக்குள்ள அவ்வதிகாரத்தைச் செலுத்துவாராகில், அவ்வதிகாரம் நலமாகச் செலுத்தப்பட்டதென்று சொல்லலாகும் அங்ஙனமின்றி, ஜனங்கள் அபிப்பிராயத்திற்கு விரோதமாய், முரண்பட்டு அடிக்கடி கவர்னர் தன் அதிகாரத்தைக்காட்டினால், அவர் நலம்தப்பிப்போய் ஜனங்களுக்கு அவரிடம் வெறுப்பு உண்டாகி, சட்டசபையார், தங்களுக்குள்ள அதிகாரத்தைச் சரியானபடி பிரயோகித்து, அவருக்கு ராஜ்ஜியாதிபத்தியம் வகிக்கமுடியாமல் போகும்படி நேர்ந்துவிடும் ஆகவே, மாகாணத் தலைவராகிய ஒவ்வொரு கவர்னரும், தான் செய்யப்போகும் காரியம் ஜனங்களுக்கு க்ஷேமகரமாய் நன்மை பயக்கும் என்றும், அக்காரியம் சரி என்று, சட்டசபையிலிராத மகாஜனங்கள் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள் என்றும், தனக்கு ஸ்பஷ்டமாய் முன்னதாகவே தெரிந்திருந்தாலொழிய, சட்டசபையார் அபிப்பிராயத்திற்கு மாறாய் முரண்பட்டு ஒரு காரியமும் செய்யவேமாட்டார்

# 8-ம் அத்தியாயம்.

## இந்தியா கவர்ன்மெண்டில் சீர்திருத்தம்

இதுகாறும் மாகாண கவர்ன்மெண்டுகளில், இந்திய நூதன ஆக்டால் ஏற்படும் சீர்திருத்தங்களைப் பற்றிச் சொல்லிவந்தேன். இனிமேல், இம்மாகாண கவர்ன்மெண்டுகளை எல்லாம் மேன்பார்வையிட்டு அடக்கிவரும் இந்தியா கவர்ன்மெண்டில் உண்டாகியிருக்கும் சீர்திருத்தங்களைப் பற்றி இந்த அத்தியாயத்தில் எடுத்து விளக்குவேன்.

நூதன இந்திய ஆக்டினாலே, இந்தியா கவர்ன்மெண்டில் மாறுபாடுகள் ஏற்பட்டும் அக் கவர்ன்மெண்டு, ஜனங்களுக்கு மாகாண கவர்ன்மெண்டுகளைப்போல, உத்திரவாதமாய் நிற்பதற்கு ஹேதுவான ஒருவித மாறுதலும் உண்டாக்கப்படவில்லை என்பதை முதல் முதலில் நீங்கள் கவனித்துத் தெரிந்துகொள்ளவேண்டும்.

ஏனெனில், பிரிட்டிஷ் பார்லிமெண்டார், இந்தியா கவர்ன்மெண்டானது படிப்படியாய் மெள்ளமெள்ளத்தான் சீர்திருத்தி அபிவிருத்திக்கு வரும்படிச் செய்யவேண்டுமே தவிர, திடீரென்று ஏககாலத்தில், அதையும் ஜனங்களுக்கு உத்திரவாதமாய் நிற்கும்படிச் செய்துவிடுவது அநுசிதம் என்று நினைத்தே, இந்திய கவர்ன்மெண்டைப்பற்றி அவ்வித மாறுபாடுகள் ஒன்றும் செய்யாமலிருந்துவிட்டனர். 1917-ம் ௵ ஆகஸ்டு ௴ 17உயில் பார்லிமெண்டு மகா ஸபையில் ஸிக்கிரிட்டரி ஆப் ஸ்டேட் செய்த விளம்பரம் அப்படியே ஜனங்களுக்கு உத்தரவாதமாய் இருந்து நடைபெறவேண்டிய அரசாக்ஷி முதன்முதலாய் மாகாணங்களில்தான் ஏற்பட்டு, அது மூலாதாரமாய் நின்று விளைக்கக்கூடிய பலனைக் கண்டறிந்து, இந்தியா கவர்ன்மெண்டையும் பின்னர் அங்ஙனம்செய்ய உத்தேசிக்கவேண்டுமே தவிர, இப்பொழுதே அப்படிச் செய்துவிடலகூடாது என்று, பார்லிமெண்டாரே தீர்மானித்துவிட்டனர். மாகாண அரசாக்ஷியில் ஜனங்களுக்கு அநுபவம் மேலிட்ட பிறகு, காலக்கிரமத்தில் முடிவில் இந்தியா முழுவதும் ஜனங்களுக்கு உத்தரவாதமாய் நிற்கக்கூடிய ஸ்வராஜ்ஜியம் ஏற்படலாகும் என்று அப்பார்லிமெண்டாரும், சொல்லிவிட்டனர்.

இந்தியா முழுவதும், இந்த ஸ்திதிக்கு கடைசியாய் வரும்வண்ணம் இந்திய நூதன ஆக்டு அநுஷ்டானத்திற்கு வந்து பத்து ஸம்வத்ஸரகாலத்திற்குப் பிறகு, அதாவது 1929-1930-ம் வருஷத்தில், மாக்ஷிமைதங்கிய நமது சக்கிரவர்த்தியார் 'கமிஷன்' ஒன்றை நியமிக்கும்படி, இந்திய நூதன ஆக்டில் நிபந்தனை ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அக்கமிஷனர்கள், இந்நூதன ஆக்டு எங்ஙனம் அநுஷ்டானத்தில் நடைபெற்று, ஜனங்களுக்கு என்னென்ன

ஸௌகரியா ஸௌகரியங்களை விளக்கலாயிற்று, என்பதைப் பரியாலோசிப்பார்கள். அதன் பிறகு, இந்த ஆக்டினால் ஏற்பட்டு உத்தரவாதமாயுள்ள அரசாக்ஷியில் ஏதாகிலும் மாறுதல்கள் ஏற்படுத்தவோ, அல்லது அதையே வியாபிக்கும்படிச் செய்யவோ அந்த கமிஷ்ஷனர்கள் நமது சக்கிரவர்த்தியாருக்கு ஒரு ரிப்போர்ட் செய்வார்கள்.

இந்தியா கவர்ன்மெண்டு ஸம்பந்தமாய் இந்நூதன ஆக்டில் ஜனங்களுக்கு உத்தரவாதம் சொல்லும் நிபந்தனைகள் ஏற்படாமலிருந்தாலும், இந்த கவர்ன்மெண்டில் சில முக்கியமான விசேஷ மாறுதல்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. அவைகள் இந்திய கவர்ன்மெண்டை தற்கால ஸ்திதியைவிட நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவரக்கூடியவைகளேதான்.

அங்ஙனம் என்னென்ன மாறுதல்கள் ஏற்பட்டு இந்தியா கவர்ன்மெண்டு சீர்திருத்தப்படுகிறது என்பதை இப்பொழுது உங்களுக்கு எடுத்துச் சொல்லுவேன்.

மாகாண அரசாக்ஷியைப்போலவே இந்தியா கவர்ன்மெண்டிலும் இருவகையாய அதிகார முறை உண்டு, ஒன்று நிர்வாகஸபையும் மற்றொன்று சட்டநிரூபண ஸபை.

நிர்வாகஸபையானது தற்காலஸ்திதியில் இந்தியாவிற்கு வைஸிராய் என்றும் பேர்பெற்றும் கவர்னர்ஜனரலுடைய ஸபையாகும். அச்சபையில் ஆறுபேர் மெம்பர்கள். அவர்களில் ஒருவரே ஒருவர் தான் இந்தியதேசஸ்தவர். இந்திய ராணுவத் தலைவருடைய மெம்பர்ஸ்தானம் இல்லாமலே, ஆறு மெம்பர்கள் உண்டு என்று தெரிந்துகொள்ளுங்கள்.

நூதன ஆக்ட்டு அடுத்த வருஷம் முதல் அநுஷ்டானத்திற்கு வருவதினாலே, இனிமேல், இவ்விந்தியா கவர்ன்மெண்டில் ஒரு இந்தியர் மாத்திரமல்ல, மூன்று இந்தியர்கள் மெம்பர்களாகிவிடுகிறார்கள். ஆகவே இது இந்தியாவிற்கு முதலில் முக்கிய லாபமாகும்.

இவ்விஷம் இந்திய கவர்ன்மெண்டில் இந்தியர்களில் மூவர் மெம்பராயிருக்கவேண்டுமென்று பார்லிமெண்டு கமிட்டியார் சிபார்சு செய்திருப்பதற்குக் காரணம் யாதெனில், நாளடைவில் இந்திய நிர்வாக ஸபையில் ஐரோப்பியர்களைவிட இந்தியர்களே அதிகமாய் ஏற்படவேண்டுமென்பது.

தவிரவும், இதுவரையில் நடந்துவரும் இந்தியா கவர்ன்மென்டில், சட்டஸம்பந்தமாய் ஆலோசனை சொல்லக்கூடிய நிர்வாக ஸபை மெம்பர் இங்கிலாந்திலே பாரிஸ்டர் பரீக்ஷை தேறினவராயாகவே இருந்துவரவேண்டுமென்கிற நிபந்தனை ஏற்பட்டிருந்தது. இந்நிபந்தனை வெகுகாலத்திற்குமுன் பார்லிமெண்டு ஸபையில் ஏற்படுத்தப்பட்ட இந்திய ஆக்டில் உள்ளது. இந்த நிபந்தனையால், இந்தியாவில் உள்ள வெகு கியாதிபெற்ற வக்கீல்களும் இங்கிலாந்தில் போய் பாரிஸ்டர் பரீக்ஷை கொடுக்காததின் நிமித்தம் சட்ட மெம்பராக, கவர்னர்ஜெனரல் நிர்வாக ஸபையில் வரக்கூடாமலிருந்

தது. இந்நூதன ஆக்டினாலே இந்த நிபந்தனை நீக்கப்பட்டு, இந்தியாவிலுள்ள யாதாமொரு ஹைகோர்ட்டு வக்கீலும் கூட இனிமேல், இந்தியா கவர்ன்மெண்டு நிர்வாகஸபையில் சட்டமெம்பராய் வர ஸ்வதந்திரம் ஏற்பட்டுவிட்டது.

ஆகவே, கவர்னர்ஜெனரல் நிர்வாகஸபையில் ஏற்படுத்தப்பட்டிருக்கிற சீர்திருத்தங்களை இத்தோடே சொல்லிவிட்டு இந்தியா கவர்ன்மெண்டு சட்டநிர்மாணஸபையில் ஏற்பட்டிருக்கும் சீர்திருத்தங்களைப்பற்றிக் கூறுவோம்.

இச்சட்டஸபையில் 68 மெம்பர்கள் தற்காலத்தில் உண்டு. அவ்வறுபத்தெட்டு மெம்பரில் ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களே பெரும்பாலர். ஆகவே அவர்களே மெஜாரட்டியில் இருக்கிறவர்கள். உத்தியோக முறை இல்லாமல் மைனாரட்டியாயிருப்பவர்களிலும், சிலர், ஸர்க்காரால் நேமிக்கப்படுபவர். மற்றும் சிலர், நிலத்திற்குடையவர்கள், மகம்மதியர், வியாபாரிகள், கைத்தொழிலாளர், மாகாணச் சட்டஸபைகளிலிருந்து வரும் உத்தியோகஸ்தரல்லாதவர்கள், ஆகிய பலவித ஜன ஸமூகங்களாலே தேர்ந்தெடுக்கப்பெற்று ஸர்க்காராலேயே நேமிக்கப்பட்டவர்கள்.

நூதன ஆக்டினாலோ, இந்தியா கவர்ன்மெண்டைப் பொறுத்த சட்டஸம்பந்தமான காரியங்கள் இருவித ஸபையாராலே, இனிமேல் நடத்தப்படும். அதாவது இவ்விரு ஸபையாருமாய்ச் சேர்ந்து அங்கீகரிக்கப்படும் சட்டங்களே இனிமேல், இந்தியா முழுவதும் சட்டமாக அமுலுக்கு வரக்கூடியவை என்று கருதவேண்டும். இவ்விரு ஸபைகளில் ஒன்றுக்குப் பெயர் ‘‘கௌன்ஸில் ஆப் ஸ்டேட்’’ மற்றொன்று ‘லெஜிஸ்லேடிவ் அஸ்ஸெம்பளி’’ இவ்விரு ஸபைகளும், இந்தியாவிற்குப் பார்லிமெண்டு சபைகளாகும்.

இங்கிலாந்திலிருக்கிற இரண்டு பார்லிமெண்டு மகாஸபைகளுக்குமுள்ள முக்கிய அம்சங்கள், இவ்விந்தியா ஸபைகளுக்குத் தற்காலத்தில் இல்லாவிடினும் நாளடைவில் இங்கிலாந்து பார்லிமெண்டு ஸபைகளைப்போலவே, இவைகளும் அபிவிருத்திக்கு வரவேண்டிய மூலாதார அம்சங்கள் ஏற்பட்டுள்ளன. இங்கிலாந்தில் ‘‘ஹௌஸ் ஆப் லார்ட்ஸ்’’ என்னும் சபைபோல உள்ளது இந்தியாவில் ஏற்படுத்தப்பட்ட ‘‘கௌன்ஸில் ஆப் ஸ்டேட்’’ இங்கிலாந்தில் ஹௌஸ் ஆப் காமன்ஸ் என்பதுபோல இந்தியாவில் இனி விளங்கப்போவது லெஜிஸ்லேடிவ் அஸ்ஸெம்பளி’’ ஆகவே ஆங்கிலேய அரசாக்ஷி இங்கிலாந்தில் பார்லிமெண்டு மகா ஸபையாரால் நடத்தப்படுவதுபோல இந்தியாவிலும் இனிமேல் அவ்விதமான பார்லிமெண்டு அரசாக்ஷியே நடந்தேற மூலாதாரமாயுள்ள வழி ஏற்பட்டுவிட்டது.

‘‘லெஜிஸ்லேடிவ் அஸ்ஸெம்பளி’’யில், இனி 140 மெம்பர்கள் இருப்பர். அவர்கள், ஸர்க்காராலே நியமிக்கப்பட்டோ, அல்லது ஜனங்களாலே தேர்ந்தெடுக்கப்பட்டோ, மெம்பராக வரக்கூடியவர்கள். எங்ஙனம் ஸர்க்கார் நேமிப்பது என்பதைக்குறித்தும்

எங்ஙனம் ஜனங்கள் தேர்ந்தெடுப்பது என்பதைக் குறித்தும், பிரத்தியேகமாய் ஆக்டின்பிரகாரம் விதிகள் ஏற்படுத்தப்பட்டு உண்டு. அவ்விதிகளின்படி ஜனங்களால், லெஜிஸ்லெடிவ் அஸெம்ப்ளிக்கு மெம்பராகத் தேர்ந்தெடுக்கப்படுபவர் 100 ஆகும்.

இதுவரையில் இந்தியா கவர்ன்மெண்டுச் சட்ட சபைக்கு வரும் மெம்பர்கள் ஜனங்களாலேயே நேரிட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்டவரல்லர். ஜனங்கள் முதல் முதலில் தங்கள் 'வோட்' மூலமாய்ச் சில நபர்களை ஸமூகங்களுக்கு மெம்பர்களாய்த் தேர்ந்தெடுப்பதும், அவ்விதமான பல ஸமூகங்களிலுள்ள மெம்பர்களை சட்டஸபைக்கு மெம்பர்களாகச் சிலரைத் தேர்ந்தெடுப்பதும் இதுவரையில் வழக்கம். நூதன ஆக்டின்படி இவ்வழக்கம் அடியோடு மாறிப்போய், ஜனங்களே நேராக, இந்திய லெஜிஸ்லெடிவ் அஸெம்ப்ளிக்கு மெம்பராகத் தேர்ந்தெடுக்கும் உரிமை கிடைத்திருக்கிறது. மேலும் இந்த ஸபைக்கு 140 பேருக்குமேல் அதிகமாக மெம்பர்கள் இருக்கலாம் என்றும், நூதன ஆக்டினால் ஏற்பட்டிருக்கிறது. அங்ஙனம் 140 மெம்பர்களுக்குமேல் அதிகமாகும்பொழுது, ஜனங்களாலே தேர்ந்தெடுக்கப்படும் மெம்பர்கள், மொத்தம் 140-க்கு 100 என்கிற வீதத்தைப்போலவே இருந்து வரவேண்டும். அதாவது மொத்தம் 7 மெம்பர்களாகில் ஐந்துபேர்கள் ஜனங்களாலே தேர்ந்தெடுக்கப்பெற்றவராயிருக்கவேண்டும் என்பது வீதசாரக்கணக்காகும். அப்பொழுதுங்கூட லெஜிஸ்லேடிவ் அஸெம்ப்ளியிலுள்ள மொத்தம் மெம்பர்களில், மூன்றில் ஒரு பங்குக்குக் குறையாமல் ஸர்க்கார் உத்தியோகத்தினர் அல்லாத மெம்பர்களே இருந்துவர வேண்டும் என்றும் நூதன ஆக்டினால் ஏற்பட்டிருக்கிறது.

ஆனதுபற்றி இந்திய லெஜிஸ்லெடிவ் அஸெம்ப்ளியில் ஜனங்களாலே தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் பெரும்பான்மையராகி, நிராக்ஷேபணையாய் மெஜாரட்டியிலிருந்து வருவதுமன்றி, மொத்தம் ஏழு மெம்பர்களில் ஐந்து பேர் ஜனங்களாலே தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்கிற கணக்குக்கு உட்பட்டு இருக்கவேண்டும்.

ஆகவே, இந்தியா கவர்ன்மெண்டு சட்ட நிர்மாணஸபையிலும் கூட உத்தியோக முறைமையில் இருக்கும் மெம்பர்கள் மேவிட்டு இதுவரையில் மெஜாரட்டியாயிருந்தது, நூதன ஆக்டின்படி அடியோடே மாறுபட்டுவிட்டது என்பது விளங்கலாகும்.

இதுவுமன்றி, இந்திய சட்டஸபைக்கு இதுவரையில் வைஸிராய் அக்கிராஸனாதிபதியாய் இருந்துவரும் அதிகாரமும் எடுபட்டுப்போய், நூதன ஆக்டால், இந்திய லெஜிஸ்லெடிவ் அஸெம்ப்ளியில், இது முதற்கொண்டு நான்கு வருஷமவரையில், வைஸிராயால் நேமிக்கப்படும் வேறொருவர் அக்கிராஸனாதிபதியாக வருவார். அந்த நான்கு வருடங்களானபின், அவ்வஸெம்ப்ளியார் தாங்களே ஒருவரை அக்கிராஸனாதிபதியாய்த் தேர்ந்தெடுத்துக்கொள்ள அதிகாரமும் கிடைத்திருக்கிறது. ஆனால், அங்ஙனம் தேர்ந்து எடுத்து நேமிக்கப்படும் அக்கிராஸனாதிபதியை, வைஸிராயானவர் அங்கீகாரம் செய்யவேண்டும் என்கிற ஒரு நிபந்தனைமாத்திரம் உண்டு.

'கௌன்ஸில் ஆப் ஸ்டேட்' என்னும் ஸபையைக்குறித்து, இப்பொழுது நோக்குங்கால், அது 60 மெம்பர்கள் உள்ளதாய் இருப்பது அம்மெம்பர்கள், ஜனங்களாலே தேர்ந்தெடுக்கப்பட்டாவது, ஸர்க்காராலே நேமிக்கப்பட்டாவது வருபவர்கள் அங்ஙனம் தேர்ந்தெடுப்பதற்கும் நேமிப்பதற்கும் உள்ள சட்டவிதிகள் பிரத்தியேகமாய் உண்டு அவ்விதிகளை அனுஷ்டித்துத்தான் நடக்கவேண்டும் இந்த அறுபது மெம்பர்களில் ஸர்க்கார் உத்தியோகஸ்தர்கள் 20 நபருக்கு மேற்படாமல் இருந்துவரவேண்டும் இந்த மகாஸபை இங்கிலாந்திலுள்ள 'ஹௌஸ் ஆப் லார்ட்ஸ்' என்னும் ஸபையின் பதவி உள்ளது இதில் பெரும்பான்மையாய் மெஜாரிட்டியிலிருக்கக்கூடிய மெம்பர்கள் ஸர்க்கார் உத்தியோகஸ்தினர் அல்லாதவர்களே. ஆகிலும் இவர்கள், ஜனங்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டு இருக்கவேண்டும் என்கிற நியதி கிடையாது. 'ஹௌஸ் ஆப் லார்ட்ஸ்' ஸபைக்கும் கௌன்ஸில் ஆப் ஸ்டேட்'' ஸபைக்கும் நாம் கவனிக்கத்தக்க ஒரு விசேஷ வித்தியாஸம் உண்டு 'ஹௌஸ் ஆப் லார்ட்ஸ்' என்பதைவிட ஒரு விஷயத்தில் இது சிலாக்கியமானது என்றே எண்ணவேண்டும் எப்படியெனில்

இங்கிலாந்தில் ராஜ்ஜியத்தை ஸ்வதந்திரக்கயிறுபோட்டு ஆளுபவர் பிரதானமந்திரியாகும் அம்மந்திரியின் சிபார்சின்பேரில் ஆங்கில மன்னர், சிலரை 'பீர்' (பீர் = பிரபு) ஆக நேமிக்கக்கூடும் அங்ஙனம் நேமிக்கப்பட்ட ஆங்கிலேய பிரபுக்களே இங்கிலாந்தில் ஹௌஸ் ஆப் லார்ட்ஸ் மகாஸபையில் மெம்பர்களாயிருப்பவர்- அதாவது ஹௌஸ் ஆப் லார்ட்ஸ் ஸபையார் வம்சவத்தில் ஆங்கிலத்துரைத்தனத்தாராலேயே நேமிக்கப்பட்டவர்கள்தான் அவர்களை ஜனங்கள் தேர்ந்தெடுப்பது என்பது ஒரு நாளும் இல்லை ஜனங்கள் ஹௌஸ் ஆப் லார்ட்ஸ் ஸபைக்கு மெம்பர்களைத் தேர்ந்தெடுத்தல் இதுவரையில் இல்லவே இல்லை இது இப்படியிருக்க, நூதன ஆக்டால் இந்தியா கௌன்ஸில் ஆப் ஸ்டேட் ஸபைக்கு மெம்பர்களை, ஜனங்கள் தேர்ந்தெடுக்கும்படி விதி உண்டு இப்படி ஆரம்பத்திலேயே ஏற்படுவது ராஜ்ஜியத்திற்கு எவ்வளவு நன்மை! மேலும் ஆங்கிலநாட்டு ஹௌஸ் ஆப் லார்ட்ஸ் ஸபையை, அநேகமாய வம்சபாரம்பரியமாயவரும் மெம்பர்களுடைய ஸபை என்றே சொல்லவேண்டும் ஏனெனில் தகப்பன் லார்டாயிருந்து செத்துப்போனால், அவன் பிள்ளை லார்டாக வருவது வம்ச பாரம்பரியமாம் ஆகவே, இங்ஙனம்தான் ஹௌஸ் ஆப் லார்ட்ஸில் மெம்பர்களாய அநேகர் இருந்துவருவது இந்தியாவிலோ அப்படியன்று வம்ச பாரம்பரியமாய மெம்பர்கள் கௌன்ஸில் ஆப் ஸ்டேட்டுக்கு வருவது முடியாதகாரியம் ஸர்க்காரால் நியமிக்கப்பட்டாவது, அல்லது ஜனஸமூகத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டாவதுதான் இந்த கௌன்ஸில் ஆப் ஸ்டேட்டுக்கு மெம்பர்கள் வரக்கூடுமே தவிர, வேறு வகையாய மெம்பர்தல் முடியாதவிஷயம்-தவிரவும், 'லெஜிஸ்லெடிவ் அஸெம்பளி'' க்கு மெம்பர்கள் ஜனங்களாலே நேரிடவே, வோட் மூலமாயத் தேர்ந்தெடுக்கப்படுவது போலவே, கௌன்ஸில் ஆப் ஸ்டேட்டுக்கும் மெம்பர்கள், ஜனங்களாலேயே, நேரிடவே

## 9-ம் அத்தியாயம்

### இந்தியா ஸிக்கிரடேரி ஆப் ஸ்டேட்டும், அவர் ஆலோசனை சபையும்

இந்திய அரசாக்ஷியில் இந்தியா கவர்ன்மெண்டுக்கு மேல் அந்தஸ்திலுள்ளதும், இந்திய கவர்ன்மெண்டை அடக்கியாளுவதுமான உத்தியோகம், இந்திய ஸிக்கிரடேரி ஆப் ஸ்டேட் என்பவரது. அவர், இந்திய அரசாக்ஷியைப்பற்றி பார்லிமெண்டு மகாசபையாருக்கு உத்தரவாதமாயிருப்பவர். அப்பார்லிமெண்டு சபையே, இந்த ஸிக்கிரிடேரி ஆப் ஸ்டேட் மூலமாய் இந்திய கவர்ன்மெண்டை அடக்கி ஆளுவது. மாக்ஷிமைதங்கிய நமது சக்கிரவர்த்தியாரின் ராஜ்ஜியமாகிய இங்கிலாந்திலே எந்தெந்த காலத்தில் எந்த எந்த கக்ஷியார் ஆதிபத்தியத்திலிருக்கிறாரோ அந்தந்த காலத்தில் அக்கட்சியாரைச் சேர்ந்த ஒருவரையே இந்தியாவிற்கும் ஸிக்கிரிடேரி ஆப் ஸ்டேட்டாகத் தேர்ந்தெடுத்து நியமிப்பது வழக்கம்.

"இந்திய கௌன்ஸில்" என்று பேர்பெற்ற ஒரு சபையும் உண்டு. அச்சபை அவருக்கு இந்தியா விஷயமாய் ஆலோசனை சொல்லுவதற்கு ஏற்பட்டது. ஸிக்கிரடேரி ஆப் ஸ்டேட்டுக்கு ஆபீஸ் இங்கிலாந்திலே. அதற்கு இந்தியா ஆபீஸ் என்று பெயர். இவருடைய சம்பளமும், இவருடைய ஆலோசனை சபையாரின் சம்பளமும், இன்னும் இந்தியா ஆபீஸ் சம்பந்தமாயுள்ள எல்லாச் செலவும், இது வரையிலும், இந்தியாவிலிருந்தே கொடுபட்டு வந்தது. இவ்விதமான செலவு அநீதி என்று இந்தியப் பிரமுகர்கள் சொல்லியிருக்கின்றனர். இந்திய நாஷனல் காங்கிரஸ் சபையும், அது ஏற்பட்ட 1885-ம் வருஷம் முதல் இத்தனை வருஷங்களாய், அம்மாதிரி இந்தியா பணத்தைச் செலவிடுதல் பிசகு என்று முறையிட்டுவருகின்றது. ஏனெனில் இங்கிலீஷ் ராஜாங்கத்திற்கு, இந்தியாவைப்போல, 'காலனி' என்று வழங்கும் அநேகம், ஆங்கிலேயர் புதிதாய்க் குடியேறின தேசங்கள் இருக்கின்றன. அவ்வித காலனிகளுக்கு அதிபதியாய், இந்திய ஸிக்கிரடேரி ஆப் ஸ்டேட் போலவே உத்தியோகம் வகிக்கும் ஒருவர் இங்கிலாந்தில் இருக்கிறார். அவர்தான் அக்காலனிகளின் ராஜாங்க விஷயங்களை எடுத்து, பார்லிமெண்டாருக்கு, இந்திய ஸிக்கிரடேரி ஆப் ஸ்டேட் இந்தியாவைப்பற்றிச் சொல்லுவதைப் போலச் சொல்லுகிறவர். அப்போப்பட்ட காலனிகளுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஸிக்கிரடேரிக்கும், அவர் ஆபீஸ் ஸிப்பந்திகளுக்கும் உள்ள எல்லாவிதச் செலவுகள், அக்காலனிகளால் கொடுபடாமல், இங்கிலாந்திலுள்ளவர்களின் செலவாக எண்ணப்பட்டு, பிரிட்டிஷ் ராஜாங்கச் செலவிலேயே கணக்குக் காட்டப்பட்டுவருகிறது. ஆகையினாலே, இந்திய ஸிக்கிரடேரி ஆப் ஸ்டேட்டின் ஆபீஸ் சம்பந்தமாயுள்ள செலவெல்லாம், இங்கிலீஷ் ராஜாங்கத்தார் பொறுத்துக்கொள்ளாமல், இந்தியா செலவில் தள்ளுவது அக்கிரமம் என்று நாஷனல் காங்கிரஸ் முறையிட்டுக்கொண்டுவருகிறது.

இவ்விதமான அநீதியை இந்திய நூதன ஆக்ட்டு நீக்கலாயிற்று. ஸிக்கிரட்டரி ஆப் ஸ்டேட்டு உத்தியோகம் வகிப்பவருக்கு வருஷச்சம்பளம் 5,000 பவுன். இது தவிர, இவருக்கு அடுத்தபடி உத்தியோகத்திலுள்ள இந்தியா அண்டர் ஸிக்கிரட்டரிகளுள் சம்பளமும், இவர்கள் ஆபீஸுக்கு உண்டாகும் சகல செலவுகளும் இனிமேல் இந்தியர்கள் தலையில் போடப்படுவதாமல், இங்கிலீஷ் ராஜாங்கத்தாரே, தங்கள் பொக்கிஷத்திலிருந்து கொடுக்கப்போகின்றனர்.

ஆனதுபற்றி, இவ்வளவு செலவு இனிமேல் குறைந்துபோவது இந்திய ராஜ்ஜியத்திற்கு வருஷா வருஷம் வெகு லாபகரமல்லவா?

மேலும், 1908-ம் வருஷம் வரையில் இந்திய ஸிக்கிரட்டரி ஆப் ஸ்டேட்டின் சபையாரில் ஒரு மெம்பர்கூட இந்தியராக இருந்ததே இல்லை. அதிலுள்ள எல்லா மெம்பர்களும் ஆங்கில உத்தியோகஸ்தர்களுமாவது, அல்லது இந்தியாவில் வேலையாயிருந்து பென்ஷன் வாங்கிக் கொண்டிருக்கும் ஆங்கிலேயர்களுமாவது தான் இருந்தவர்கள். 1908-ம் வருஷத்தில் இரண்டு இந்தியர்கள், அந்த சபைக்கு மெம்பர்களாக நேமிக்கப்பட்டனர். அவ்விருவருள் ஒருவர் ஹிந்துமதத்தினர், மற்றவர் மகம்மதியர். 1917-ம் வருஷத்தில் அதே சபைக்கு மூன்று இந்தியர்கள் மெம்பர்களாய் நேமிக்கப்பட்டனர்.

1919-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் ஸிக்கிரட்டரி ஆப் ஸ்டேட் செய்த ஜகப்பிரஸித்தமான விளம்பரத்தின் காரணமாய், ஆங்கிலேய பார்லிமெண்டாரால் ஏற்படுத்தப்பட்ட ஜாயிண்டு பார்லிமெண்டு கமிட்டியாரும் ” இந்திய ஸிக்கிரட்டரி ஆப் ஸ்டேட்டின் ஆலோசனை சபையில் இந்திய மெம்பர்களை அதிகப்படுத்திக் கொண்டே வரவேண்டும் என்று சிபார்சு செய்திருக்கின்றனர். அப்போப்பட்ட சிபார்சை அமுலுக்குக் கொண்டுவரும் பொருட்டு, இந்திய ராஜாங்க காரியங்களில் ஆலோசனை சொல்லும்வண்ணம் ஸிக்கிரட்டரி ஆப் ஸ்டேட் ஆலோசனை சபையில் மேற்சொல்லிய மூன்று இந்தியர்களுக்குமேல் அதிகமாய் இந்தியர்கள் மெம்பர்களாக இனிமேல் நியமிக்கப்பட்டு வருவார்கள். இவ்விந்திய, ஆலோசனை சபையிலுள்ள இந்திய மெம்பர்களுக்கு, ஆங்கில நாட்டார், தங்கள் பொக்கிஷத்திலிருந்தே சம்பளம் வருஷா வருஷம் கொடுப்பதுமன்றி, அவர்கள் இந்தியாவைவிட்டு வெகுதூரம் சென்று, ஆலோசனை சபை மெம்பர்களாக இங்கிலாந்தில், தங்கியிருப்பதினாலுண்டாகும் செலவுக்காக, வருஷா வருஷம் 600 பவுன் படியும் ஒவ்வொருவருக்கும் ஆங்கில நாட்டுக் கணக்கிலேயே இனி கொடுபட்டு வரப்போகிறது.

தவிரவும், இந்தியா கவர்ன்மெண்டாரும், இந்திய மாகாணங்களிலுள்ள சட்டசபைகளும் இந்திய விஷயமாய் ஒருங்குசேர்ந்து ஒத்துமையாய்ச் செய்யும் விஷயங்களில், ஸிக்கிரடரி ஆப் ஸ்டேட் இனிமேல் பிரவாதித்துத் தன் அதிகாரத்தைச் செலுத்தப்போவதில்லை. எப்பொழுதாகிலும் இந்தியா கவர்ன்மெண்டாரும் சட்டநிர்மாண சபையாரும் தம்மில் ஒற்றுமையின்றி வெவ்வேறு அபிப்பிராயம் கொள்ளும் விஷயங்களில்தான் இனிமேல் ஸிக்கிரட்டரி ஆப் ஸ்டேட் பிரவாதிப்பர்.

இவ்விதமாய்ச் சீர்திருத்தங்கள் ஏற்பட்டதின் பலனை, நன்கு தெரிந்துகொள்ள, இதுகாறும் ஸிக்கிரட்டெரி ஆப் ஸ்டேட் உத்தியோகம் நடத்திவந்ததைப்பற்றி நமக்கு என்ன அநுபவம் கிடைத்திருக்கிறது என்பதைக் கவனித்துப் பார்க்கவேண்டும். இந்தியாவிற்குப் பிரதிகூலமாயும், இந்திய கவர்ன்மெண்டு அபிப்பிராயத்திற்கும் ஆக்ஷேபணைக்கும் விரோதமாயும், இந்தியர்கள் ஒருங்குசேர்ந்து கம்பீரமாய்ச் சொன்ன இந்திய மகாஜனங்களின் அபிப்பிராயத்திற்கு மாறுபாடாயும், ஸிக்கிரட்டெரி ஆப் ஸ்டேட் அநேகம் தடவைகளில் இந்திய அரசாக்ஷி விஷயங்களில் அநாவசியமாய்ப் பிரவேசித்திருக்கின்றனர். உதாரணமாக, பருத்தித் தீர்வை விதித்ததிலும், வரவு செலவு கணக்கைப் பார்க்க ஸ்வதந்திரம் கொடுக்க இடம் கொடாமலிருந்ததிலும், சில யுத்தச் செலவுகளை அநியாயமாய் இந்தியாவின் கழுத்தில் கட்டினதிலும் இந்தியர்கள் ஸிக்கிரட்டெரி ஆப் ஸ்டேட் செய்யும் காரியங்கள் அராஜகம் என்றும் முறையிட்டதையும், இந்திய கவர்ன்மெண்டார் அக்காரியங்களைச் செய்யக்கூடாது என்று மறுத்து உரைத்ததையும் கொஞ்சமேனும் லக்ஷியம் செய்யாமல், ஸிக்கிரட்டெரி ஆப் ஸ்டேட் அக்காரியங்களை நடத்தினர். இந்தியா ஸிக்கிரட்டெரி ஆப் ஸ்டேட் அவ்விதம் செய்ததைப் பார்த்து மனம் பொறுத்து, அக்காலத்தில் இந்தியாவிற்கு வைஸ்ராயாக இருந்த <u>நார்த்புருக்கு</u> என்னும் பிரபு, இந்திய ஸிக்கிரட்டெரி செய்யும் அக்கிரமத்தை வகித்துக்கொண்டு வைஸ்ராய் உத்தியோகம் செய்து வருவதைப் பார்க்கிலும், தன் உத்தியோகத்தை ராஜீநாமாகக் கொடுத்துவிடுவதே மேலானது என்று தீர்மானித்து, வைஸ்ராய் உத்தியோகத்தை ராஜீநாமாகக் கொடுத்துவிட்டார்.

இனிமேல், நூதனச் சீர்திருத்தத்தால், மேற்சொல்லிய அக்கிரமங்களுக்கு இடமே இல்லை. இவ்வித காரியங்களைச் செய்ய இதுவரைக்கும் ஸிக்கிரட்டெரி ஆப் ஸ்டேட்டுக்கு இருந்த அதிகாரம், இனிமேல் குறைக்கப்பட்டிருக்கிறபடியாலும் இதுவும் தவிர ஜாயிண்டு பார்லிமெண்டு கமிட்டியாரும் நூதன இந்திய ஆக்டைப் பற்றிப் பரியாலோசித்து ரிபோர்டு செய்யும்போது பண்ணின சிபாரிசிலும், இந்திய ஸிக்கிரட்டெரி ஆப் ஸ்டேட்டுக்கு ஆதிபத்தியம் குறைவுபட்டு, இந்திய ராஜாங்கத்தாரே, பணஸம்பந்தமான விஷயங்களில் தாங்களே சட்டங்கள் தங்களுக்கு அநுகூலமாய் உண்டாக்கிக்கொள்ள உரிமை ஏற்பட்டுவிட்டது. இந்தியா இனி இங்கிலாந்திற்குத் தாழ்வடையாமல், தானும் ஒரு அங்கமாய் நின்று, இனி மேலான ஒரு நூதன பதவிபெற்று, இந்துதேச சரித்திரமும் சீரோங்கி விளங்கா நிற்கும்படி, ஜாயிண்டு பார்லிமெண்டு கமிட்டியார் செய்திருக்கிற சிபார்சுகள் என்னவென்றால் —

"இந்தியாவின் வரவு செலவு ஸம்பந்தமான காரியங்களையெல்லாம், இங்கிலாந்திலிருக்கும் இந்திய ஸிக்கிரட்டெரி ஆப் ஸ்டேட்டு, 'ஹ்வைட் ஹால்' என்னும் இடத்திலிருந்து, இங்கிலாந்தின் வியாபார அபிவிருத்தி நிமித்தமாய் நடத்திவரவேண்டும் என்கிற ஒரு கட்சி உண்டு. அக்கட்சியை மேற்கொண்டு தப்பு அபிப்பிராயப்பட்டு இந்திய காரியங்களைப் பரிபாலித்து வருவது, இந்தியாவிற்கும் இங்கிலாந்திற்கும் இருந்துவரும் ஒற்றுமையைச் சிதைக்க இடமாய் முடிகிறது. இதைவிட வேறு கெடுதல் அவ்வளவு அநர்த்தம் விளைவிக்காது. அவ்வித கக்ஷியும், அக்கக்ஷியின் தப்பு அபிப்பிராய

ழும், தற்காலத்தில் இங்கிலாந்தில் இருந்து வருகிறது என்பதற்கு ஸந்தேகமே இல்லை. இந்த அபிப்பிராயத்தால் இனிமேலும் தீமை உண்டாகாமலிருக்கும்படி இடங்கொடாமலிருக்கவேண்டும் என்பதும் ஸ்பஷ்டமாய்த் தெரியவருகிறது. ஐரோப்பாவில் ஜர்மனியரோடு நடந்த மகா யுத்தத்திற்கு இந்தியர்கள் போர் வீரர்களாய்ச் சென்று, அவர்கள் காட்டிய வீரபராக்கிரமம் முதலிய நற்குணங்களும், அவர்களுக்கு இருந்த ராஜபக்தி விசுவாசமும் லண்டன் மாநகரில் நடந்த ஒரு பெரிய மந்திராலோசனை ஸபையின் கீழ் மூன்றாம் அத்தியாயத்தில் காட்டியபடி விவரித்துச் சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? அந்த மந்திராலோசனை ஸபையிலே, இந்தியாவுக்கும், ஆங்கில அரசாக்ஷியைச் சேர்ந்த இதர பிரதேசங்களுக்கும் ஒன்றாகக் கொண்டு இந்தியாவின் கால ஸ்திதியைப்பற்றிப் பேச இடமுண்டாகி அப்பேச்சு வீண்பேச்சாய் முடிவதில் இந்தியாவிற்குப் பலனே இல்லை. இந்தியாவின் கால ஸ்திதியை முன்னுக்குக் கொண்டுவந்து வைப்பதற்கு அப்பேச்சுக்களை சட்டமாக்கிச் செலாவணிக்கு வரும்படி இந்தியாவிற்கு அதிகாரம் கொடுக்கவேண்டும். இந்தியாவின் க்ஷேமத்துக்குத் தக்கபடி இந்தியா ஸ்வதந்திரமான ஏற்றுமதி இறக்குமதி ஏற்பாடுகளை இந்தியா ஸௌகரியத்திற்காகச் செய்யும்படி இந்திய கவர்ன்மெண்டாருக்குப் பூர்ணமாய ஸ்வதந்திரம் கொடுத்துவிடவேண்டும். அப்படிச் செய்தால்தான் இங்கிலாந்திலிருந்து, இந்தியா கவர்ன்மெண்டிற்கு, வரவுசெலவு ஸம்பந்தமாய், ஏற்படும் நிர்ப்பந்தங்களைத் திருப்திகரமாய்ப் பரிகரிக்க இடமுண்டாகுமே தவிர, வேறு விதமாய்ப் பரிகாரம் செய்ய முடியாது. கிரேட் பிரிட்டன், ஆஸ்ட்ரேலியா, நியூஸீலாந்து, கானடா, தென் ஆப்ரிக்கா முதலிய பிரதேசங்களில், தங்கள் தங்கள் ராஜ்ஜியத்திற்கு அனுகூலமாயுள்ள தீர்வை முதலான ஏற்பாடுகளைத் தங்களே செய்துவர ஸ்வதந்திரம் ஏற்பட்டிருப்பதுபோல, இந்தியாவும் வியாபார விஷயமாயுள்ள ஏற்பாடுகளைத் தனக்கு அனுகூலமாகும்படி சுயேச்சையாய்ச் செய்துகொள்ள இடங்கொடுத்துவிடவேண்டியது அத்தியாவசியகம் என்பது ஸ்பஷ்டமாய் விளங்கும்" என்று பார்லிமெண்டரி கமிட்டியார் தாராளமாய்த் தங்கள் ரிபோர்டில் சிபார்சு செய்திருக்கின்றனர். ஆகவே அவ்வித சிபார்சினால், இந்தியாவுக்கு வந்திருக்கும் ஸ்வதந்திரம் மிகவும் நன்கு மதிக்கத்தக்கதுமன்றி அந்த ஸ்வதந்திரத்தைச் சரியானபடி உபயோகித்தால், இந்தியாவிலுள்ள கைத்தொழில்கள் அபிவிருத்தி அடைந்து இந்தியர்களும் அதிகமாய் முன்னுக்கு வந்து சுகமடைவார்கள்.

இந்திய ராஜாங்கவிஷயமாய் இந்திய ஸிக்ரடெரி ஆப் ஸ்டேட் இங்கிலாந்திலுள்ள பார்லிமெண்டு மகா ஸபையாருக்கு உத்தரவாதம் சொல்லக்கடமைப்பட்டவர் என்று ஏற்கனவே எடுத்துக் காட்டியிருக்கிறேனாகையினாலே, இந்திய அரசாக்ஷியை அடக்கி ஆண்டு வருவது, கடைசிமுடிவில் இங்கிலாந்திலுள்ள பார்லிமெண்டு மகா ஸபை என்பதை நீங்கள் ஞாபகத்திலிருத்திக்கொள்ளவேண்டும். ஆகவே, இந்த பார்லிமெண்டாருக்கு இந்திய அரசாக்ஷி விஷயமாய் உள்ள அதிகாரம், நூதன இந்திய ஆக்டால், எங்ஙனம் மாறுபட்டிருக்கிறது என்பதை இப்பொழுது கவனிப்போம்.

இந்திய அரசாக்ஷி விஷயமாய், இங்கிலாந்திலுள்ள பார்லிமெண்டு மகா ஸபையே, எல்லாவற்றிற்கும் மேலான அதிகாரம் வகித்து வருவதாயினும், ‘இந்திய சமாசாரங்களைப் பற்றி அச்சபை கவனிப்பதே இல்லை’ என்பதும், ‘இந்தியர்களுக்குள்ள குறைகளைத் தீர்க்க, அச்சபை தனக்குள்ள அதிகாரத்தைச் செலுத்தி, இந்திய அரசாக்ஷி விஷயமாய்ப் பிரவேசித்ததே இல்லை’ என்பதும், வெகு நாளாக பார்லிமெண்டாரின் பேரில் குற்றம் சாட்டப்பட்டு வருகிறது. அதினாலேயே பார்லிமெண்டில், இந்தியா விஷயமான பேச்சுக்கள் வரும்போது ‘அச்சபையிலுள்ள வெற்று பெஞ்சுகளுக்கு முன்னிலையில்தான் பேசவேண்டும்” என்கிற வார்த்தை பழமொழிபோல விளங்கலாயிற்று. அதாவது, இந்திய சமாச்சாரம் பார்லிமெண்டார் பரியாலோசனைக்கு வரும்போது, பார்லிமெண்டு மெம்பர்கள், ‘இந்தியா விஷயங்களில் நமக்கு என்ன ஊறக்கு’ என்று எண்ணி, வெளியில் போய்விடுவது வழக்கமாம். இவ்விதம் ஊறக்கு இல்லாதிருந்தல் சாதாரணமாய மனிதர்களுக்கு ஸகஜம்தான். பிரிட்டிஷ் பார்லிமெண்டாருக்குத் தங்கள் நாடாகிய இங்கிலாந்து ஸ்காட்லாந்து, அயர்லாந்து விஷயங்களைப் பற்றிக் கவனிப்பதுதான் அவசியம். பார்லிமெண்டு மெம்பர்களில் அநேகருக்கு இந்தியா என்பதே தெரியாது. அவர்கள் இந்தியாவை வந்து பார்த்தவர் அல்லர். இந்தியாவும் இங்கிலாந்திலிருந்து வெகுதூரத்திலிருப்பதினாலே பார்லிமெண்டு மெம்பர்களுக்கு இந்திய விஷயங்களைப் பற்றிக் கவனிக்க மனமில்லாமலிருந்து வருவதும், உலகத்தில் மனிதர்களுக்கு ஸகஜமானதுதான். ஆனது பற்றி, இந்தியாவில் ஏதாகிலும் யுத்தமோ பெரிய கிளர்ச்சியோ, முதலான ஆபத்து வந்துவிட்டது என்றால்தான், பார்லிமெண்டு ஸபையாருக்கு இந்தியாவைப் பற்றி ஞாபகம்வர இடமுண்டாகுமே தவிர, வேறுவழியாய் அச்சபையாருக்கு இந்தியாவைப் பற்றிக் கவலை ஏற்பட இடமே கிடையாது

இவ்விதம் வெகுகாலம் நடந்துவந்தருப்போய், இந்தியர்களுக்குத் தற்காலத்தில் நூதனச் சீர்திருத்தத்தால் ஸ்வதந்திரங்கள் உண்டாயிருப்பதும், தாங்கள் ஸ்வயேச்சையாய்த் தங்கள் காரியங்களைப் பார்த்துவர இடம் கொடுக்கவேண்டும் என்று கோரிவருவதும், தங்கள் தேசத்தைப் பக்ஷபாதமின்றி, நியாயமாய்ப் பரிபாலித்துவர வேண்டும் என்று முறையிடுவதும் ஆகிய ஆங்கிலருக்குள்ள குணங்கள், அவ்வாங்கில நாட்டின பார்லிமெண்டு மகா சபையாராலேதான் இந்தியர்களுக்குக் கிடைத்திருக்கிறது என்பதையும், அதற்காக இந்தியர்கள் அச்சபைக்குக் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்பதையும் நாம் தெரிந்துகொள்ளவேண்டும். 150 வருடங்களுக்கு மேலாக இந்தியா ஆங்கில அரசாக்ஷிக்குட்பட்டுவந்தாலும், ‘இப்பொழுது தானே, ஆங்கில பார்லிமெண்டார், இந்தியாவிற்கு ஸ்வராஜ்ஜியம் அளிக்க நினைத்து, அதை ஜனங்களுக்கு உத்தரவாதம் சொல்லும்படி ஏற்படுத்த யத்தனித்தது? அவ்வித ஸ்வராஜ்ஜியமும் ஒருவாறு தானே கொடுபட்டிருக்கிறது’ என்று ஜனங்கள் சொல்லிக்கொண்டு வருகிறார்களல்லவா? ஆங்கிலேயர்களுக்கே, இவ்விதமான ஸ்வராஜ்ஜியாதிபத்தியம் கிடைத்துவர, பிரிட்டிஷ் பார்லிமெண்டார் எத்தனை நூற்றாண்டு சிரமப்பட்டுவந்திருக்கின்றனர் என்ப

தையும், அவ்வித ராஜ்ஜியாதிபத்தியத்தின் விஷயங்கள் இங்கிலாந்திலுள்ள உள்நாட்டு ஜனங்களுக்கும் கூலிவேலைசெய்து பிழைக்கும் ஜனங்களுக்கும் தெரியவர எவ்வளவு நீண்டகாலம் பிடித்திருக்கிறது என்பதையும் நாம் சற்று நிதானித்துப் பார்க்கவேண்டும். உலகத்தில் பிராசீனமாயுள்ள ஜாதியார்களாயினும் நவீனமான ஜாதியார்களாயினும் வாஸ்தவமாய சுயேச்சை என்பதையும், உத்தரவாதமாய் நிறக்கப்படும் அரசாக்ஷி என்பதையும், ஆங்கில பார்லிமெண்டாரைப் போலும், ஆங்கில ஜனங்களைப்போலும், அபிவிர்த்திக்குக்கொண்டு வந்திருப்பது கிடையவே கிடையாது. ஸ்வயாதிபத்தியம் வேண்டுமென்றும், ஸ்வதந்திரங்கள் கைப்பற்றவேண்டுமென்றும், உலகத்தில் முதல் முதலாய் நிலை நாட்டியவர் ஆங்கிலரே. அங்ஙனம் தங்கள் ராஜ்ஜியத்திலேயே இவ்வுரிமைகளை ஆங்கிலர் நிலைநாட்டியது படிப்படியாயும், நிதானமாயுமாகத்தான். அவர்கள் முன்பின் வருவதைப் பரியாலோசனை செய்யாமல், திடீரென்று தங்கள் சௌகரியத்திற்கு ராஜாங்க விஷயங்களில் மாறுதல்கள் ஏற்படுத்தினதே இல்லை. ஆகையினால் 'கிரேட் பிரிட்டன்' என்று இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து தேசங்கள் சேர்ந்த ராஜ்ஜியத்தையே, உலகத்தில் பார்லிமெண்டு ராஜாங்கம் உண்டாக்கிய மூல மாதா என்று சரித்திரத்தில் வழங்கி வருகிறது. அதாவது, உலகத்தில் இதர தேசத்தவர்கள் ஆங்கில நாட்டவர் அரசாக்ஷியைப் பார்த்துப் பார்த்து, தங்கள் தேசங்களிலும், பார்லிமெண்டு அரசாக்ஷியை உண்டாக்கி இருக்கின்றனர். அங்ஙனமிருக்க, நாம் இப்பொழுது, நமக்குள்ள ஸ்வதந்திரங்களை நிறைவேற்றவொட்டாமல், அவைகளைப் பந்தப்படுத்தும்படியாய் அந்த ஆங்கில பார்லிமெண்டாரே சட்டம் ஏற்படுத்தி இருக்கிறார்கள் என்று குறைசொல்லிவருகிறோம். அவ்விதம் குறைகூறி, முறையிடுவது தப்பு என்பதில்லை. அது சரிதான். ஆயினும் ஆங்கில அரசாக்ஷியில் எப்போதாகிலும் ராஜீய விஷயங்கள் பின்னடைந்தால், அப்போதெல்லாம் முன்னுக்கு வரவேண்டிய காரியங்கள் ஒன்றன்பின் ஒன்றாய்ச் செய்யப்பட்டு, இந்தியாவும் ஸ்வராஜ்ஜிய ஸ்வதந்திரம் அடைந்து அபிவிர்த்திக்கு வர, இங்கிலாந்திலுள்ள பார்லிமெண்டு அரசாக்ஷியைப் போல், இந்தியாவிலும் அரசாக்ஷி ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் ஒருபோதும் மறக்கவேகூடாது. பிரிட்டிஷ் ராஜாங்கத்தார், இந்திய அரசாக்ஷியில் சில விஷயங்களில் இந்தியாவை ஓங்க ஒட்டாமல், அடக்கி அடக்கி பின்னுக்குக்கொண்டுவர ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள் என்று, அவ்வாங்கிலேய அரசாக்ஷியை நாம் கடோரமாய்க் கண்டனம் செய்யும்போது, அவ்வரசாக்ஷியினாலேயே, நமக்கு என்னென்ன நன்மைகள் உண்டாகி, இந்தியா முன்னுக்கு வந்திருக்கிறது என்பதை எப்பொழுதும் நாம் மறக்கவேகூடாது. அவ்வரசாக்ஷி பின்னடைந்தாலும், முன்னேற்றத்தையே கருதிப் போவது என்பதை நாம் நினைத்துப்பார்க்கவேண்டும். நாம் பயபக்தியுடன் கொண்டாடும் கங்கா நதியையே, இதற்கு உதாரணமாய் எடுத்துப் பார்ப்போம். அந்நதி ஒரே ஒழுங்காய் ஒரு நேர்க்கோடுபோல் ஓடுவதில்லையே! அது வளைந்து வளைந்துதானே ஓடுகிறது!! அந்நதி வளைந்து வளைந்து போவதைமாத்திரம் பார்த்தால், அது பின்னடைந்து, ஒருநாளும் சமுத்திர சங்கமாகாது

என்றுதானே நினைக்கும்படியாகும். அது வளைந்து பின்னடையும்போது நேரே ஒழுங்காய்ப்போய் சமுத்திர ராஜனைச் சேராதது போலக் காணப்படுவதை மாத்திரம் பார்த்து, நாம், "அந்த நதி ஒருநாளும் சமுத்திரத்தோடு கலக்கவே கலக்காது, அது பின்னடைவேயுள்ளது" என்று அதன்பேரில் குற்றஞ்சாட்டி கோபித்துக்கொள்ளலாகுமோ!!! அந்த நதி எப்படி வளைந்து வளைந்து பின்னடைபெற்றுப்போனாலும், அதன் ஓடும் வேகம் மாத்திரம் எப்பொழுதும் சமுத்திரமுகமாகத்தானே இருந்து வருகிறது. அங்ஙனம் சமுத்திரத்தை நோக்கி, நதியின் வேகத்தைச் செலுத்தக்கூடிய சக்தியாம்சங்கள், மெள்ள மெள்ள நிதானமாகத்தானே அந்நதியை முன்னேக்கியே தள்ளிச் செலுத்துகின்றன. அப்புண்ணிய நதி அமெரிக்கையாய் சமுத்திரமுகம் நோக்கிச் செலுத்தல் நம் கண்ணுக்கு நன்றாய்ப் புலப்படவில்லை. அது வளைந்து போகும்போதெல்லாம் அதன் வேகமும், பின்னோட்டமும் வெளிப்படையாய் நமக்குத் தெரிகிறது. அந்தப் புண்ணிய மகாநதியாகிய கங்கையின் வேகத்தைப்போலவே, பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபையும் நடைபெற்று வருகிறது. 'ராஜ்ஜியாதிபத்தியம் தப்பு மார்க்கத்தில் பிரவேசிக்கும்போல் காணப்படும்போதெல்லாம், ராஜ்ஜியத்திற்கு சீர்திருத்தமும், அபிவிருத்தியும், ஜனங்களுக்கு ஸ்வதந்திரங்களும் கிடைத்துவிட ஆரம்பம்' என்பதை, ஜனங்கள் ருஜுவாய் நம்பவேண்டும் என்று ஹர்பர்டு ஸ்பென்ஸர் என்கிற வேதாந்தியும் எடுத்து உரைத்திருக்கின்றனர். சென்ற 150 வருஷகாலமாய் இந்திய அரசாக்ஷியின் சரித்திரத்தை ஒருதலைப்பக்ஷமாய் ஒரு கக்ஷியையே மேற்கொண்டு படியாமல், நிஷ்பக்ஷமாய், பதட்டமின்றி, நிதானமாய்க் கவலையோடு படித்தறிவதே நலமது. ஈஸ்டு இந்திய வர்த்தக கம்பெனியார் இந்தியாவிற்கு வியாபார நிமித்தமாய் வந்த நாள் முதல் நாளது பரியந்தம் இந்தியா எங்ஙனம் முன்னேக்கி வந்துகொண்டே இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்வது அங்ஙனம் இந்திய சரித்திரம் படித்ததின் பலனாகும். அச்சரித்திரத்தினலே, இந்தியாவாகிற நதி எப்பொழுதும் ஸ்வராஜ்ஜியம் அல்லது ஜனங்கள் உரிமைபெற்ற ராஜ்ஜியம் என்கிற சமுத்திரத்தை நாடியே எப்பொழுதும் சென்று வருகிறது என்று அறியக்கூடும். நதி பின்னடையும்போது ஜலத்தில் ஒரு கிளர்ச்சி உண்டாவதுபோல, இந்தியர்கள், இந்தியா ஸ்வராஜ்ஜியாதிபத்திய விஷயமாய்ப் பின்னடைகிறதைப் பார்த்து, கூக்குரலிட்டு கிளர்ச்சியுண்டாக்குவதும், ஆங்கில அரசாக்ஷியினாலேதான். இத்தியாதி காரணம்பற்றி பிரிட்டிஷ் பார்லிமெண்டு மகாசபையார் இந்தியா விஷயமாய்த் தாங்கள் வகித்துவந்த அதிகாரத்தைக் குறைத்துக்கொண்டு, இந்தியாவிலேயே, ஆங்கில பார்லிமெண்டுபோல, பார்லிமெண்டு அரசாக்ஷி நடைபெறும்படி முதல் முதலாய் இந்திய நூதன ஆக்டினால் இப்பொழுது சீர்திருத்தங்கள் ஏற்படுத்தியிருக்கின்றார்கள்.

இந்தியாவிற்கு ஆங்கிலேய பார்லிமெண்டார் சொல்லியிருப்பதைச் சுருக்கிச் சொல்லுமிடத்து, 'இப்பொழுதுமுதல் நீங்கள் உங்களுக்குப் பிரத்தியேகமாய்க் கொடுத்திருக்கும் பார்லிமெண்டு அரசாக்ஷியைக் கைக்கொண்டு ராஜ்ஜியபாரம் பண்ணுங்கள். நாளாவர்த்தியில் உங்கள் பார்லிமெண்டும் எங்கள் பார்லிமெண்டுபோல ஆகிவிடும்" என்று ஏற்படுகிறது.

# 10-ம் அத்தியாயம்

## மாக்ஷிமைதங்கிய நமது மகாராஜ சக்கிரவர்த்தியார்

ஆங்கிலநாட்டிற்கும், அதிபதியாயிருந்து அரசராய் விளங்குபவர், மாக்ஷிமைதங்கிய ஜியார்ஜ் V என்னும் நமது மகாராஜ சக்கிரவர்த்தி பிரிட்டிஷ் பார்லிமெண்டாரால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் நூதன சீர்திருத்தங்களடங்கிய இந்திய ஆக்டை அங்கீகாரம் செய்து, அதற்கு தன்னுடைய ராஜமுகரும் போட்டுள்ளவர் அம்மன்னவரே இந்திய மகா ஜனங்களுக்கு இந்த நூதன ஆக்டால் விளையும் நன்மையும் அவர்கள் இந்திய அரசாக்ஷியில் அபிவிர்த்திக்கு வருவதையும் பார்த்து, நம்முடைய சக்கிரவர்த்தியவர்களுக்கு நாம் எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறோம், என்பதை நான் இந்தச் சட்ட சம்பந்தமாய் எழுதிவரும் இச்சிறு பிரசுரத்தில் எடுத்துச் சொல்லாமலிருந்தால் மிகத் தவறாக எண்ணப்படும்

இந்தியாவிலுள்ள எல்லாவித ஜாதி, மதவாஞ்சிரமத்தார்களும், நானாவித ஜனங்களும், பலபல விதமாய், இந்திய அரசாக்ஷி விஷயமாய் அபிப்பிராயப்பட்டிருக்கும் கக்ஷிகளும், இந்திய ராஜாங்க முறையைப்பற்றி கடோரமாய்க் குற்றங்கூறிக் கண்டனஞ்செய்துவந்தபோதிலுங்கூட, யாவற்று ஜனங்களும் மாக்ஷிமைதங்கிய தங்கள் சக்கிரவர்த்தியவர்களிடம் வெகு பக்தி விசுவாசம்வைத்து, அவரைத் தங்கள் ராஜாவாகவே வணங்கி வருகின்றனர் இந்தியாவைப் பாதுகாக்கும் நிமித்தமாய் ஏற்படுத்தப்பட்ட இந்தியப் பாதுகாப்பு ஆக்ட் சம்பந்தமாய் இந்தியாவில் கலகம் செய்து ஜெயிலில் அடைபட்டிருந்த 806 கலகக்காரர்களை, கல்கத்தா ஹைகோர்ட் ஜட்ஜ் பீச்சுக்கிராப்டு துரையும் நானுமாக 1918-ம் வருஷத்தில் வங்காளமாகாண கவர்னமெண்டார் உத்திரவின்பேரில் விசாரித்து வந்தோம் அக்காலத்தில் ஜெயிலிலிருந்த ஒரு கலகக்காரனை நான் நேரிலேயே பார்த்து விசாரிக்கவேண்டியிருந்தது அவனை ஜெயிலில் போடும் முன் இந்தியாவிலுள்ள கலகக்கூட்டத்தில் சேர்ந்து அக்கூட்டத்தாருக்கு குருக்களாய் ராஜ்ஜியத்திற்கு வெகு அனர்த்தங்கள் விளைக்க நினைத்து, அக்கலகக்காரர்களுக்கு தலைவனாயிருந்தவன் - அவனைப் பார்த்து "1911-ம் வருஷத்தில் முடிசூட்டு வைபவமாய் இந்தியாவில் நடந்த தர்பாருக்கு மாக்ஷிமைதங்கிய நமது அரசர் இங்கே வரும் முன்பும் அவர் வந்துவிட்டுப் போனபின்பும் இந்தியாவில் கலகக்காரர்கள் கொள்ளையிட்டும் போலீஸ்காரர்களை வதைத்துக் கொன்றும் வங்காள மாகாணத்தில் பலவித அட்டூழியம் செய்து ராஜ்ஜியத்தைக் கோலாகலப்படுத்திவந்தனரே! அம்மன்னவர் இந்தியாவில் தங்கியிருந்த காலத்தில் அக்கலகக்காரர்கள் ஒருவிதக் கலகமும் செய்யாமல் அமரிக்கையாய் நடந்து வந்தது என்ன காரணத்தினாலே?" என்று நான் நேரில் கேட்டதற்கு அக்கலகத்தலைவன்

"ராஜா இந்தியாவுக்கு வந்தபோது கலகக்கூட்டத்தலைவர்கள் நம
தேசத்தில் மாக்ஷிமைதங்கிய நம்முடைய சக்கிரவர்த்தியார் இருக்
கும் காலத்தில், இந்தியாவில் கலகம் என்பதே தெரியக்கூடாது.
ஒருவரும் இந்தியாவில் ஒருவித இடைஞ்சலும் தொந்திரவும் கொடுக்
கக்கூடாது" என்று தங்களைச் சேர்ந்த கலகக்காரர்களுக்கு கட்டளை
பிறப்பித்ததனாலே அவர்கள் யாவரும் ஒன்றுபோல அக்கட்டளையின்
படி ராஜ்ஜியத்தில் ஒரு கெடுதியும் உண்டாக்காமலிருந்துவந்தனர்"
என்று பதில் சொன்னன். ஆகையினாலே இந்தியாவிலுள்ள எல்
லா திறத்து மனிதர்களும் மாக்ஷிமைதங்கிய தங்கள் சக்கிரவர்த்தி
யாரிடம் வைத்து இருக்கும் பக்தி விசுவாசம் எவ்வளவு ஆழ்ந்து
அதிகரித்துள்ளது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

இதற்கு யாதுகாரணம் என்று விசாரிப்போமாகில், விக்டோ
ரியா மகாராணியார் இந்தியாவை நேரிலேயே பரிபாலனம்பண்ண
ஆரம்பித்தநாள் முதற்கொண்டு இந்தியர்களிடத்தில் அவ்வரசி
வைத்திருந்த அபிமானமும் அநுதாபமும் அதிகம் அவ்வபிமான
மும் அநுதாபமும் இந்தியர்கள் மனதைக் கவர்ந்து அவர்களுக்கு
உருக்கம் உண்டாக்கியது அவ்வரசியார் இந்திய ஜனங்களுக்குத்
தாய்போலிருந்து பிறப்பித்த பிரகடனப் பத்திரிகைமூலமாய் வெளி
யிடப்பட்ட வாக்கை இந்தியர்கள் தங்கள் ஸ்வயேச்சைகளைக் கைக்
கொள்ள சாதனமாகக்கொண்டு அவ்வாக்கை வெகு சிலாக்கியமாய்
மனதில் ஊன்றிவைத்திருக்கின்றனர் அவ்வரசியார் காலத்து இள
வரசராயிருந்த எட்வர்ட் என்கிற அவள் புத்திரனும் 1875-ம௵
இந்தியாவைப் பார்க்க வந்திருந்தபோது இந்தியர்களும் அவரைப்
பற்றி வெகு நல்ல அபிப்பிராயப்பட்டுப் புகழ்ந்தனர். விக்டோரியா
மகாராணியார் காலஞ்சென்றபின்னர் "எட்வர்ட்" நமது சக்கிர
வர்த்தியாக மகுடாபிஷேகம்பூண்டு, நம்மை ஆண்டு வரும்போது
அவ்வரசருக்கு "ராஜ்ஜிய சமரசர்" என்கிற பட்டம் வாய்ந்து
அவர் காலத்தில் சண்டை, சச்சரவு, யுத்தம் முதலான கெடுதிகள்
ஒன்றும் இன்றி, ராஜ்ஜியம் சுபிக்ஷமாய் இருந்து வந்தது. அவரும்
1905-ம் வருஷம் இளவரசரான ஜியார்ஜ் என்னும் தன் புத்திரனை
இந்தியாவைப் பார்த்துவர அனுப்பினர் அவ்விளவரசரும் இந்தி
யர்களுக்குக் காட்டிய அநுதாபம் அவர்கள் மனதில் பதிந்து உருக்க
முண்டாக்கியது அவ்விளவரசரே இப்பொழுது நமக்கு சக்கிரவர்
த்தியாராய் விளங்காநிற்கின்றார். அவர் 1910-ம் வருஷம் பட்டாபிஷே
கம்பூண்டு அரசராகி, 1911-ம் வருஷத்தில் மகுடாபிஷேக வைபவம்
கொண்டாடும் நிமித்தம் நடைபெற்ற தர்பாருக்கு இந்தியாவிற்கு
வந்திருந்தபோது அவர் போலீஸ் பந்தோபஸ்து யாவற்றையும் நிரா
கரித்துவிட்டு, ஒரு போலீஸ்காரன்கூட தன்னோடு இராமல் தானா
கவே ஜனங்கள் மத்தியில் சென்று, அவர்களோடு தாராளமாய்
வார்த்தையாடி வந்தனர் ஆனதுபற்றி இந்திய ஜனங்களுக்கும்
அவரிடம் பிரத்தியேகமாய் சிரேஷ்டமான அபிமானம் ஜனிக்கலா
யிற்று அவர் இந்தியாவைவிட்டு தன் நாட்டுக்குத் திரும்பிப்போ
கையில் இந்தியர்களைப் பார்த்து "நீங்கள் பயப்படாதீர்கள் உங்க
ளுக்கு நல்லகாலம் வருகிறது" என்கிற உறுதி வார்த்தையை அளி
த்துப்போயிருக்கிறார் இந்திய மகா ஜனங்களுக்கும் இந்திய அரசா

களுக்கும் அச்சக்கிரவர்த்தியார் சென்ற டிசம்பர் மாதம் கம்பீரியமாய்ப் பிரசித்தப்படுத்தியுள்ள பிரகடனமும் இந்தியர்களுக்குள் கூட்டுறவையும் ராஜ்ஜிய பக்தியையும் ஒற்றுமையும் அதிகரிக்கலாயிற்று. அப்பிரகடனப் பத்திரிகையே இந்திய நூதன ஆக்டிற்குக் காரணபூதமாகி, அவ்வார்க்கையும் மாக்ஷிமைதங்கிய நம் சக்கிரவர்த்தியார் அங்கீகரித்துள்ளனர்.

கிரேட் பிரிட்டனில் நடைபெறும் அரசாக்ஷி உத்தரவாதம் நிர்ணயிக்கப்பட்ட அரசாக்ஷியாகும். அதாவது, அந்த தேசத்து அரசர் தன் மனோயிஷ்டப்படி ஒரு நிபந்தனைக்கும் கட்டுப்படாமல் கொடுங்கோலரசர்போல் அதிகாரம் செலுத்திப் பிரஜைகளை ஆளமுடியாது. அவருடைய அதிகாரம் இன்னது என்பது அந்த தேச ராஜாங்க அமைப்பால் வரையறுத்துக்காட்டப் பட்டுள்ளது. அந்த அதிகாரத்திற்கு உள்ளடங்கியே ஆங்கில அரசர் பிரஜைகளைப் பரிபாலித்துவரவேண்டும். ஆனால் தன்னுடைய சரீரசம்பந்தமாய் மட்டும், அவர் தன் இஷ்டப்படி நடக்கக்கூடுமே தவிர, பிரஜைகளை, ராஜாங்கமுறைப்படிதான் ஆண்டுவரவேண்டும்.

இந்நிபந்தனைகளைப் பார்த்து, ஆங்கில மன்னர் என்று சொல்லுவது வெறும்பேச்சுக்குத்தான் அரசரே ஒழிய, வாஸ்தவமாய் அவருக்கு அரசருக்குள்ள அதிகாரம் அவரிடமுள்ள செங்கோலைத் தவிர ஒன்றும் இல்லையே என்று சொல்லி, உலகத்தில் ராஜா என்பவர் மகாவிஷ்ணு அவதாரமல்லவா? அவர் ராஜ பதவியும் தெய்வத்தன்மை பொருந்தியதல்லவா? ஆங்கில ராஜாவுக்கு இது ஒன்றும் இல்லையே? என்று ஜனங்கள் எண்ணுவது சகஜம்.

அங்ஙனம் நினைப்பது சரியல்ல. ராஜபதவி தெய்வத்தன்மை பொருந்தியது என்று சொல்லிக்கொள்ளும் கொள்கை சரியானபடி, உலகத்தில் பாவ ஆரம்பித்தது முதலாய்த் தீரவிசாரித்துப் பார்க்குமளவில் ஒரு ஒழுங்குக்காவது, சட்டத்திற்காவது அடங்கி நடவாமல், 'தன்மனம்போன போக்கே சட்டம்' என்று நினைத்து ராஜ்ஜியத்தை ஆண்டுவரும் அரசருக்கு தெய்வத்தன்மையுள்ள ராஜபதவி இல்லை என்று ஏற்படுமே அல்லாது, ராஜாங்க அமைப்புக்கும் சட்டத்திற்கும் ஒத்தபடி ஆங்கில நாட்டைப்போல அரசாண்டுவரும் அரசருக்குத்தான், அவ்வித தெய்வத்தன்மை பொருந்திய ராஜபதவி இருக்கிறது என்று சித்தாந்தப்படுத்தவேண்டும். அங்ஙனம் ராஜாங்க அமைப்புக்கு வரம்பு கடவாமல் உள்ளடங்கி நடந்துவரும் அரசரே, உத்தரவாதம் நிர்ணயிக்கப்பட்ட ராஜாங்கத்தலைவர் என்று மதிக்கப்படுவார்.

“மேற்சொல்லப்பட்டது எங்ஙனம் சரி” என்பதை இப்பொழுது விளக்கிக்கூறுகிறேன். ராஜ பதவி தெய்வத்தன்மை பொருந்தியது என்று சொல்லும்போது பூமியில், அரசரானவர் கடவுளுக்குப் பிரதிநிதியாய் இருந்து, கடவுள் ஜனங்களை பூமியில் எங்ஙனம் பரிபாலித்து வருகிறாரோ, அங்ஙனமே தெய்வத்தன்மை பொருந்திய ராஜபதவியை வகிக்கும் அரசரும் தன் பிரஜைகளைப் பரிபாலித்து வருபவர் என்று நாம் தெரிந்துகொள்ளவேண்டும். ஆகவே, கடவுளுக்கு ஜனங்களின்மேல் செலுத்த என்ன அதிகாரமுண்டோ அவ

வதிகாரமே அவ்வித அரசருக்குமுண்டு என்று ஏற்படும். இப்பொழுது கடவுள் பூமியில் உள்ள ஜனங்களிடத்தில், தன் அதிகாரத்தை எவ்விதம் செலுத்திவருகிறார் என்று விசாரிக்குங்கால், தன் இஷ்டப்படி, ஒருவரம்புக்கும் கட்டுப்பட்டு அகப்படாமல் கடவுள் பூமியில் ஜனங்களைப் பரிபாலித்து வருவதில்லை என்று தெரியாதா? அவர் ஜனங்களைப் பரிபாலனஞ்செய்து வரச் சட்டதிட்டங்கள் ஏற்பட்டு இல்லையா? அவைகளைக் கடவுளே ஏற்படுத்தியுள்ளார். அச்சட்டங்களின்படிக்குத்தான் தானும் ஆன்மாக்களை ஆண்டுவருகிறார். கடவுளால் ஏற்படுத்தப்பட்ட சட்டங்களையே, நாம், இயற்கை விதிகள் என்றும், சுகாதார விதிகள் என்றும், தர்மசாஸ்திர நியாய விதிகள் என்றும் பலவிதமாய்ச் சொல்லி வருகிறோம். சர்வ வல்லமையுள்ள கடவுளும் இவ்விதமான விதிகளை அநுஷ்டித்து, தனக்குள்ள ஸர்வ அதிகாரத்தை இவைகளுக்குள் அடக்கி, அவைகளின் பிரகாரமே பூமியில் ஆன்மாக்களை, அவைகளின் நன்மைக்காக, பரிபாலித்து வருகின்றனர். இங்ஙனமின்றி, சர்வ வல்லமையுள்ள அக்கடவுள் தன்னிஷ்டப்படி ஒரு நிபந்தனைக்கும் உட்படாமல் பூமியில் ஜனங்களைப் பரிபாலித்து வரின் அக்கடவுளைக் குரூரக்கொடுங்கோலரசர் என்று தானே சொல்லவேண்டும்! கடவுளோ அப்போப்பட்டவரல்லர். நியாய விரோதமின்றி, நன்மைக்காக ஏற்படுத்தப்பட்ட விதிகளின் பிரகாரம் ஜனங்களை கிருபையுடன் பரிபாலித்து வந்து, ஜனங்களுக்கே தொண்டராகி இருப்பவர். ஆனதுபற்றியே, கடவுளும், தான் சிருஷ்டித்த ஆன்மாக்களை தன் எதேச்சைப்படி பரிபாலித்துவராமல், தான் ஏற்படுத்தியுள்ள தர்மசாஸ்திராதி விதிகளாலே தன்னையும் கட்டுப்படுத்திக்கொண்டு, ஆன்மாக்களைப் பரிபாலித்து கிருபாகடாக்ஷித்துவருகிறார். ஆகவே, இக்காரணம்பற்றி கடவுளின் அரசாக்ஷியும் உத்தரவாதம் நிர்ணயிக்கப்பட்ட அரசாக்ஷி என்றே புலப்படும்.

தவிரவும், இந்துமத சித்தாந்தத்தின்படியும் கிரிஸ்துமதக்கொள்கையின்படியும், கடவுளானவர் பூமியில் மனிதனாக ஜனித்து ஜனங்களுக்கு தெய்வ சம்மதமாய் எங்ஙனம் நல்லபடி நடந்துவந்து, வாழ்நாளைக்கழித்து, முக்திபெறுவது என்பதைத் தானே தன் நடவடிக்கையினாலே காட்டியும் உள்ளார். இதையே இந்து மதத்தினரும், கிரிஸ்துமதத்தினரும் கடவுள் பல அவதாரம்செய்து வந்தார் என்று சொல்லுவதின் தாத்பரியமாகும். கடவுள் மானிட ஜன்மம் எடுத்து மானிடர்களோடு கலந்து ஊடாடி, ஆன்மாக்களின் நன்மையை நாடியே பாடுபட்டு வந்து, அவ்வான்மாக்களின் நிமித்தமாகவே அவர் பல அவஸ்தைகளையும் அநுபவித்து, அடியார்க்கடியராகி, ராஜாதிராஜராக விளங்காநிற்பவர் என்று நாம் புகழுவதில்லையா? அக்கடவுள் மானிட ஜன்மம் எடுத்து, தான் நடத்திக்காட்டிய நடவடிக்கைகளாலே, "சட்டவிதிகளைத் தானே ஏற்படுத்தி அதன்படி அநுஷ்டிப்பவன் எவனோ, அவனே பிறரையும் அச்சட்டவிதிப்படி நடத்திப் பரிபாலிக்கக்கூடும்" என்பதை திருஷ்டாந்தமாக விளக்கியுள்ளார். 'தானடங்க தன் குல மடங்க' என்கிற பழமொழி கடவுள் நடவடிக்கையாலே ருஜுவாகும். இவ்விதமாய கடவுள் அவதார புருஷனாயினும், மானிடருக்குள்ள விதிகளின்படி, தானே முதலில் நடந்து

காட்டி, மானுஷனும் எங்ஙனம் தெய்வத்தன்மையை அடையக்கூடும் என்பதை விளக்கியிருக்கின்றனர். ஆகவே, 'கடவுளானவர் ஜனங்களைப் பரிபாலிப்பதில், சில விதிகளை ஏற்படுத்தி, அவ்விதிகளின்படி முதலில் தானே நடந்து காட்டி ஜனங்களையும் தன் கிருபா கடாக்ஷத்துடன் அநுதாபத்தோடு பரிபாலித்து வருகிறான்'' என்று விளங்கலாகும்.

ஆனதுபற்றி 'தெய்வத்தன்மை பொருந்திய ராஜ பதவி' என்பது 'சில விதிகளை ஏற்படுத்தி அவைகளின்படி ஜனங்களைப் பக்ஷத்துடன் ஆதரித்து, கிருபாகடாக்ஷம் மேலிட்டு, தொண்டுசெய்வதே தன் கடமை என்று அவர்களைக் கருணையுடன் பரிபாலித்துவரும் கடவுளின் அதிகார உரிமையை உடைத்தது'' என்று தாத்பரியப்படும்.

பூர்வ காலத்தில் கிறிஸ்தவ வேதாந்திகளும் இந்துமத தர்ம சாஸ்திரிகளும் பாராளும் மன்னருக்கு மகாவிஷ்ணு பதவியுண்டு என்றும், அவருடைய பதவி தெய்வத்தன்மை பொருந்தியது என்றும் பிரயோகப்படுத்திவந்தது மேற்கூறிய அர்த்தத்திலேயே தவிர, வேறுவித தாத்பரியத்தில் இல்லை. ஆயினும், காலாந்தரங்களிலே பூமியில் கொடுங்கோல் மன்னர் அரசாளத் தலைப்பட்டுப் பிரஜைகளை ஒரு சட்டத்திற்காகிலாவது, அல்லது ஒரு கட்டுப்பாட்டிலாவது ஆதரவுடன் உள்ளடக்கி ஆண்டுவராமல், தங்கள் மனோபீஷ்டப்படி, தோன்றின விதமெல்லாம் ஆண்டு, தங்கள் ஸ்வார்த்தத்தையே உத்தேசித்து வந்தவர்களாகையால் "தெய்வத்தன்மை பொருந்திய ராஜபதவி'' என்பது முற்றும் வேறாகி, அக்கொடுங்கோல் மன்னரால் சிதைந்துபோகலாயிற்று. ஆனதுபற்றியே, ஐரோப்பாவிலுள்ள அநேக ராஜ்ஜியங்களில் ராஜ பதவிக்குள்ள தெய்வத்தன்மை நீங்கி அந்த ராஜாங்கங்களும் வேரோடு அற்றுப்போயிருக்கின்றன. ஆயினும் ஆங்கிலேய ராஜத்துவம் மாத்திரம் அங்ஙனம் சிதைந்துபோகாமல் நீடித்து, நிலைத்து வருவதுடன், ஆங்கிலேயர்களுக்கு ஸ்வராஜ்ஜியாதிபத்தியம் மிகுந்து ஆங்கில அரசும் ஜனங்களால் கொண்டாடப்பட்டுவருகிறது. இதற்குக்காரணம், ஆங்கில அரசர், தான் பிரத்தியேகமான பிறப்பைச்சேர்ந்தவர் அல்லர்; தானும், தான் பரிபாலித்துவரும் பிரஜைகளில் ஒருவர் தான் என்று எண்ணி அடங்கி நடந்துவருதலேயாம்.

ஆகவே, பிரிட்டிஷ் ராஜ்ஜியத்தில் ராஜபதவி தெய்வத்தன்மை பொருந்தியது என்கிற கொள்கையைத் தழுவி, மேற்கூறியபடி ராஜ பதவியின் பூர்வார்த்தத்திலேயே அத்தேசத்தில் ராஜத்துவம் உபயோகித்துவரப்பெற்று, அம்மேன்மையான பதவி சிதைவு அடையாமல் காப்பாற்றிவரப்படுகிறபடியால், அந்த பிரிட்டிஷ் ராஜாங்கம் எவ்வளவு மாக்ஷிமை பொருந்தியதாகும்! ஆங்கில நாட்டு சரித்திரமும் ஜனங்களுடைய சுயேச்சையைப்பற்றிச் சொல்லும் சரித்திரமாகவே இருந்துவருகிறது. இதர ராஜ்ஜியங்களிலுள்ளவர்களும், ஆங்கில நாட்டில் நடைபெறும் அரசாக்ஷியைப்போலவே, தங்கள் நாட்டிலும் அரசாக்ஷி ஏற்படுத்தலாயினர். மேலும், பிரிட்டிஷ் ராஜாங்கமே, உலகத்தில், பார்லிமெண்டு அரசாக்ஷிக்குக் காரணபூத

மாகி இதர தேசஙகளில வழஙகும பாாலிமெனடு அரசாக்ஷிககு மூல மாதா என று கொணடாடபபெறறு வருகிறது இதுவுமனறி, ஆஙகிலேய சரிததிரம, பூமியில ராஜபதவி தெயவதனமை பொருநதியது எனபதை வெளிககாடடி, அததேசததிலுளள அரசாக்ஷியும அககொளகையையே மேறகொணடு உததரவாதம நிாணயிககபபடட ராஜாஙகமாயிருநதுவருவதை இதர தேசததாாகள பாாததுப புகழலாகி, பிரிடடிஷ தேசததாா சரிததிரமும மேலோஙகிப பிரகாசிககினறது மாக்ஷிமைதஙகிய நமது ஜியாாஜ சககிரவாததி அவாகள, ராஜாஙக நெறி முறைககுக கடடுபபடடு, மனபபோககெலலாம போகாதபடி சடடபபடியே, பிரஜைகளைப பரிபாலிததது, தான ஆணடுவரும பிரஜைகளில தானுமே ஒருவராயபபாவிதது, ராஜஜிய பாரம வகிததுவருவதினாலே, அவருககு ஜனஙகள வைததிருககும ராஜ பதவி எவவளவு மகிமையுடையது! அவா ஜனஙகளோடு தானும ஒருவராகவே இருநது அவாகளோடு ஊடாடுவதும, கேவலம ஹீனஸதிதியிலிருககும இடஙகளையும சேரிகளையும தானே நேரில போயபபாாததுவருவதும, ஜனஙகளுககாகத தானே தேகசிரமெடுததுப பாடுபடடு, அவாகள நனமைககாகவும, அவாகள அபிவிாததிககாகவும தாஸனாயிருநது உழைததுவருவதும, ஜனஙகள மனதில ஊடுருவி அவவேநதருககு மேறசொலலிய ராஜ பதவியை எஙஙனம ஜனஙகள கொடாமலிருககககூடும! அதினால அவருககு எவவளவு மகிமையும ஏறபடடிருககவேணடும!! குடிகளுககு அடியனாகி, நமமரசா ராஜஜியததை மகிமையோடு ஆணடுவருவதும தவிர, இளவரசராகிய தன மூததகுமாரனை இநதியாவிறகு அனுபபிவிதது, இநதியாவில தன ஆகடினபடிககுளள சீாதிருததஙகளைச சீககிரம பிரதிஷடை செயது ஸதாபனம செயய ஆஞஞாபிததிருககினறனா அவவிள அரசரும, தன தநதைககுளள மானுஷ தெயவத குணஙகளையே அவலமபிதது நடநதுவருகிறாா மாக்ஷிமைதஙகிய நமது சககிரவாததியாா, இநதிய மகாஜனஙகளுககுக கருணைகூாநது காமபீரியமாய பிரசுரிததுச சொலலிய அவரது பிரகடனப பததிரிகை, தனககு இநதியாகளிடம நிறைநது பொஙகும அநுதாபமும ஜனஙகளுககு நலல ஸதிதிவரவேணடும எனகிற எணணமும, அவாகளோடு தானும ஒருவராய நினறு ஒறறுழைககவேணடும எனகிற புததியும, ஜனஙகளும தஙகளுககுக கிடைபபதை நனகு மதிககததிறமையுளளவாகள எனறு அவருககுளள நமபிககையும, ஆகிய நறகுணஙகளையே, வெளிககாடடிவருகிறது. ஆகவே நமது சககிரவாததி அவாகள கருணைகூாநது அளிததிருககும மேறகூறிய பிரகடனபபததிரிகையினாலே நமதேசததிறகு சீாதிருததஙகள உணடாகி, அவைகள நிறைவேறும நிமிததம நாம எனனெனன காரியம இனிமேல செயயவேணடும எனபதை எடுததுககாடட அவா வாககுகளே அறிகுறியாயிருககினறன அககருணை வாககுகள எஙஙனம நமககு அறிகுறிகள எனபதைபபறறி இநதப பிரசுரததிறகுக கடைசிமுடிவாக அடுதத அததியாயததில எடுததுககாடடுவேன

# 11-ம அத்தியாயம்.

## எலக்டர்களின் கடமை

ஜனங்களுக்கு உத்தரவாதமாயிருக்கும் ஸ்வராஜ்ஜியாதிபத்தியம் இந்தியாவில் அபிவிருத்தியடைந்து நன்மை பயக்குமாறு, இந்திய நூதன ஆக்டின்படி அடுத்தவருஷம் முதல் அமுலுக்குவரும் சீர்திருத்தங்களையெல்லாம் பின்வருமாறு அடக்கிக்கூறிவிடலாம். அவையாவன,—(1) முனிஸிபாலிடிகளிலும் லோகல் போர்டுகளிலும் பூராவுக்கும் ஸ்வயாக்ஷி வந்துவிடல், (2) மாகாண அரசாக்ஷியில் ஒருவாறாய ஸ்வராஜ்ஜியம் ஜனங்களுக்கு உத்திரவாதமாயக் கிடைத்தல், (3) இந்தியா கவர்னமெண்டில் இந்திய மெம்பர்கள் அதிகப்படு, ஸர்க்கார் நடத்தும் காரியங்களில், பொதுஜன நன்மையின் பொருட்டு, குற்றம் குறைகளை எடுத்துக்காட்டுவதற்கு அதிகாரம் அதிகப்பட்டிருத்தல்.

நூதனச் சீர்திருத்தங்களாலே உண்டாகும் உரிமைகளையும் ஸ்வதந்திரங்களையும் ஜனங்களும், அவர்கள் பிரதிநிதிகளும் நன்கு மதித்து சாவதானமாயும் சரியானபடியும் ராஜாங்கத்தைப் பரிபாலித்து வந்தாலதான், மென்மேலும் ஜனங்களுக்கு ஸௌக்கியமுண்டாகி அரசாக்ஷியில் இன்னமும் மேலான உரிமைகளை அடைய இடமுண்டாகும்.

ஆகையினாலே, சீர்திருத்தங்களால் நன்மை விளையுமாறு எலக்டர்களாயிருக்கும் ஜனங்கள் தங்களுக்குள்ள வோட் உரிமையைச் சரியானபடி செலுத்தி, அவர்கள் இச்சீர்திருத்தங்களின் ஸம்பந்தமாய என்னென்ன செய்யவேண்டுமோ அவைகளை எல்லாம் நாம் இப்பொழுது கவனித்துப் பார்ப்போம்.

(1) புதிதாய ஏற்படும் ஸபைகளுக்கு மெம்பர்களைத் தேர்ந்தெடுக்கும் வோட்டு உரிமையுள்ள ஒவ்வொருவரும், தனக்கு இருக்கும் வோட்டு உரிமை, தன்னுடைய சுயநலத்திற்காகவாவது, தன் வகுப்பினருக்காவது தன் ஜாதியாருக்காவது நன்மைபயக்க ஏற்படுத்தப்பட்டிருக்கிறது என்று எண்ணிவிடாமல், ராஜ்ஜியம் பூராவும் நன்மை யடையவே, வோட் கொடுக்கும் சுவதந்திரம் தனக்கு கொடுபட்டிருக்கிறதாக மதிக்கவேண்டும். மேலும் அந்த வோட் உரிமையை, தன்னிடம் சாவதானமாயக் காப்பாற்றும்படி வைத்திருக்கும் ஸொத்தைப்போல பாவித்து, குடிகளாகிற இந்தியர்களுக்கு அரசாக்ஷியால் நன்மை விளையும்படி உபயோகித்துவரவேண்டும்.

(2) அங்ஙனம் ஜாக்கிரதையாய தன் வோட்டுரிமையை ஒரு எலக்ஷன் ஸமயத்தில், செலுத்தவேண்டியபோது, "இத்தனை தூரம் என் வீடுவாசலைவிட்டு, சிரமப்பட்டுக்கொண்டு வோட் கொடுப்பதற்காக யார் போவது? வோட் கொடுப்பதற்கு ஏற்படுத்தியுள்ள இட

மும் வெகுதூரமாயிற்றே? வோட் கொடுக்கிறதற்காக, வேறொரு காரியமுமில்லாமல் அவ்விடத்திற்கு இவ்வளவு தூரம் சிரமப்பட்டுப் போக யாருக்கு முடியும்? அப்படிச் செய்வதினால் எனக்கு என்ன நன்மை?" என்று பலவிதமாய்ச் சொல்லிக்கொண்டு வோட் கொடுப்பதற்குப் போகாமல் ஒரு வோட்டர் தங்கிவிட்டாரானால், அவனுக்குக் கொடுத்திருக்கப்பட்ட வோட்டு உரிமை நிஷ்பலனாகி அவ்வுரிமையைக் காப்பாற்றிச் சரியானபடி உபயோகிக்குந் திறமை இல்லை என்பதை வெளிக்காட்டலாகும். தன் ராஜ்ஜியத்திலே, அப்போப்பட்டவன் பற்றில்லாத பாமரனாகி ஜனங்கள் திருப்தியின்றி வருந்துவதற்கும், ராஜாங்கமும் சரியானபடி நடவாதிருப்பதற்கும் அவனே காரணபூதமாகிறான் என்பதற்கு ஸம்சயமே இல்லை.

(3) யாதொருவோட்டர், தன் வோட்டினால் தேர்ந்தெடுக்கப்படும் நபர் மெம்பராக வருவதற்கு யாதொரு பிரமேயமுமில்லை என்று தெரிந்திருந்தபோதிலுங்கூட அவ்வோட்டர் தனக்கிஷ்டப்பட்ட நபருக்கு வோட்டு கொடுக்கப்போகாமல் இருப்பது சுத்தப் பிசகு. வோட்டு கொடுப்பவர்கள் தங்கள் வோட்டு உரிமையைச் செலுத்தினால்தான், பொதுக்காரியங்களில் ஜனங்களுக்கு ஊக்கம் இருக்கிறது என்பதைத் தெரிவிக்கலாகும். அப்படி வோட்டு கொடுக்கப்போனால்தான், வோட்டருக்கு ராஜாங்க விஷயங்களும் தெரியலாய், ராஜ்ஜியத்திற்கும் நன்மை உண்டாகும். 'ஹென்றி ஸிட்ஜ்விக்கு' என்னும் ஒரு கியாதிபெற்ற இங்கிலீஷ் வித்துவான், வோட்டு விஷயமாய்ச் செய்ததுபோல ஒவ்வொரு வோட்டரும் நடந்துவரவேண்டும். அவ்வித்துவான் செய்தது என்னவென்றால், ஒருகாலத்தில் அவர், தன் ஊராகிய இங்கிலாந்தைவிட்டு, ஸ்விட்ஸர்லாந்து என்னும் தேசத்திற்கு உடம்பு சௌக்கியத்தைப் பார்த்துக்கொள்ளும்பொருட்டுப் போயிருந்தனர். அப்பொழுது, இங்கிலாந்தில் பார்லிமெண்டு மெம்பர்களைத் தெரிந்தெடுக்கும் ஸமயம் வந்துவிட்டது. அச்சமயத்தில், அவர் தன் தேகஸ்திதியைப் பாராட்டாமலே, தான் யாருக்கு வோட் கொடுத்துப் பார்லிமெண்டு மெம்பராக்க வேண்டுமென்று கருதியிருந்தனரோ, அவருக்கு வோட்டு கொடுப்பதற்காக, ஸ்விட்ஸர்லாண்டை விட்டு இங்கிலாந்துக்குத் திரும்பிப்போகத் தீர்மானித்துவிட்டனர். இங்கிலாந்திலிருந்த அவருடைய சிநேகிதர்களில் சிலர் 'நீர் வீணாக உடம்பைக் கெடுத்துக்கொண்டு, இங்கே உம்முடைய வோட்டு கொடுப்பதின் நிமித்தம் வரவேண்டாம். நீர் யாருக்கு வோட் கொடுக்கப்போகிறீரோ, அவருக்கு இந்தத் தடவை மெம்பராவதற்கு பிரமேயமே கிடையாது. உம்மைச்சேர்ந்த ராஜீய கக்ஷியாருக்கு இந்தத் தடவை ஜயமில்லை. அபஜயம் வருவது நிச்சயந்தான்" என்று பலவிதமாய் அந்த ஸிட்ஜ்விக்கை வராமல் தடை பண்ணினர். ஆயினும், அந்தப் பெரியவர், தன் சிநேகிதர்கள் எழுதியவைகளை எல்லாம் கொஞ்சமேனும் கவனியாமலும், தன் தேகஸ்திதியைப் பாராட்டாமலும், ஸ்விட்ஜர்லாந்திலிருந்து இங்கிலாந்திற்கு வந்து, தன் வோட்டைக் கொடுத்தனர். அப்பொழுது அவர் சிநேகிதர்கள், "ஏன் நீர் அனாவசியமாய்ச் சிரமப்பட்டுக்கொ

ண்டு, இவ்வளவு தூரம் வந்தீர்? நீர் வோட்டுக் கொடுத்து நியமிப்பதாக நினைத்த நபர் இந்தத் தடவை மெம்பராகவா முடியாதே? உம்முடைய கக்ஷியார்களுக்கும் பிரயோஜனமில்லையே'' என்று கேட்டதற்கு அவர், "என் சுபந்தோமைக்காகவாவது அல்லது என் கக்ஷியார் சுகமடைவதற்காகவாவது நான் இவ்வளவு தூரத்திலிருந்துவரவில்லை எனக்கு இருக்கும் வோட்டு உரிமையை நான் ராஜ்ஜியத்தின் பொது நன்மைக்காகச் செலுத்தக் கடமைப்பட்டு வந்தேன் அப்படி நான் செய்யாதபோனால் என் ராஜ்ஜியத்திற்கு நான் நம்பிக்கை துரோகம் செய்தவன் ஆய்விடுவேன் எனக்கு எந்த கக்ஷி ஜயித்தாலும் எந்த நபர் மெம்பராகவந்தாலும் பிரமாதமில்லை ராஜ்ஜியம் நன்மையடைய வேண்டுவது தான் என் ஒரு நோக்கம்'' என்று பதில் உரைத்தனர் ஆகவே இந்தியாவில் ஒவ்வொரு வோட்டரும் இந்த ஸ்டீஜிவிக்கு மகான் நடந்துவந்ததுபோல், ராஜ்ஜியநன்மையை மேற்கொள்ளக் கொண்டு, தன் தன் வோட்டைக் கொடுக்காமல் வீணில் இருந்துவிடலாகாது

(4) மேற்சொல்லியபடி ஒவ்வொருவர்களும், எந்த ஸ்திதியிலிருப்பவனானாலும் சரி, தன் வோட்டைக் கொடுக்காமல் தங்கிவிடுவது சுத்தப்பிசகு என்று தெரிந்துகொண்டு, வோட்டு கொடுக்கும் போது, "எந்த நபருக்கு வோட் கொடுத்தால் ராஜ்ஜியத்திற்கு நன்மை?'' என்பதைக் கடைப்பிடித்துச், சரியான நபருக்கு தன் வோட்டைக் கொடுக்கவேண்டும் யார் சரியான நபர்? என்று கேட்டால், ஒவ்வொரு எலக்ஷன் காலத்திலும், அநேகம் நபர்கள், 'தான் மெம்பராக வரவேண்டும்' என்று சொல்லிக்கொண்டு, வோட்டு ஸம்பாதிக்க அலைகின்றனர் அநேகர் அப்படி வருவதினாலே, வோட்டர்களுக்கு, 'யார் யோக்கியமானவர்? எவருக்கு வோட்டு கொடுப்பது நலம்'' என்பதைத் தெரிந்துகொள்ளுவது வெகு சிரமமாக முடிகிறது வோட் ஸம்பாதித்து மெம்பராய் வரவேண்டும் என்று முயல்கிறவர்கள், இன்னபடிச் செய்வது உத்தமம்' என்று ப்ருத்தறிய வொட்டாதபடி, வோட்டர்கள் மனதைக் கலக்கிவிடுகின்றனர் அவ்வோட்டர்கள், ஏழையாயுமிருந்து ராஜீய விஷயங்களில் ஒன்றும் தெரியாதவராயுமிருந்துவிட்டால், கேட்கவே வேண்டியதில்லை அவர்களுக்கு இன்னது செய்வது யுக்தம் என்று தெரியாமல் மனங்கலங்கிப் போய் விடுகிறது மெம்பராக வரவேண்டுமென்று யத்தனப்படுகிறவர்களும், இப்போப்பட்ட வோட்டர்களுக்கு பணங்கொடுத்தோ, அல்லது ஏதாவது அவர்களுக்குப் பிரத்தியேகமாய் அநுகூலம் செய்தோ அவ்வோட்டர்களை தன் வசமாக்கிக் கொள்ளலாகும் அங்ஙனம் வோட்டர்களுக்கு லஞ்சம் முதலானது கொடுத்து மெம்பராகவா இஷ்டமில்லாமல் இருக்கும், நபராகில், அவரும் வோட்டர்களைப் பார்த்து, தன்னை எலக்ஷனில் மெம்பராக நியமித்துவிட்டால், ஜனங்களுக்கு வெகு நன்மைகள் செய்யப் புகுவதாயும், தான் தன் வேலையை ஜனநன்மைக்காக வெகு ஒழுங்காய்ப் பார்த்து வருவதாயும், வோட்டர்களைப் பலவிதமாய் ஸ்துத்தியம்பண்ணி, அவர்களுக்கு ஹிதவார்த்தைகளை எல்லாம் சொல்லி, பலவிதமாய் அவர்களுக்கு அநேகம் வெறும் வாக்குத்தத்தங்கள் செய்துவரக

கூடும வேறொருவா, 'தான சுயேசசையையே'கருதி நடபபவா' எனறும 'தான ஒரு உததியோகஸதரையும கணடு அஞசுவதிலலை' எனறும சொலலிககொணடு, 'ஜனஙகளுககுப போடபபடடிருககும வரியைக குறைதது விடுவதாயும, தனககு மெமபரானல, ஸாககார உததியோகஸதாகளை தன காலில விழுமபடிசசெயது, தான சொலலுமபடி அவாகளை ஆடடபபணணுவதாயும' சொலலிவாக கூடும ஆகவே இததியாதி வாாததைகளை எலலாம சொலலிககொணடு, வோடடு ஸமபாதிகக வரும நபாகளிலிருநது, 'இனனவா ஸவயநலம கருதி வருபவா, இனனவா வீணவாாததை பேசுபவா, இனனவா காரியவாதியாவா' எனபதை நனறாய ஆராயநதுபாாதது அறியவேணடுவது ஒவவொரு வோடடருககும அவசியம. ஆகவே, மேலசொலலியபடி பலவிதமான கடடுரை கூறுபவாகளையாவது, வீணமுகஸதுதி செயபவரையாவது, ஆதமஸதுதி செயபவரையாவது, வோடடாகள கவனிககாமல, "எவன ஒருவன நனனடததையே தன நடததையாக மெயயாய மனதில கொணடுளளனோ" அவனைததான ஒவவொரு வோடடரும தோநதெடுதது மெமபராய நேமிககவேணடும ஆகையினாலே, வோடடாகாள! "வீணஸதுதிசெயது, காசுகொடுககும மோசககாராகளை மெமபாகளாகத தோநதெடுககாதீாகள அவாகள வாாததைகள வீண ஆடமபரம அவாகள பேசசு காரியததிறகுதவாது அவாகளுக்கு, உஙகளுககுளள வோடடைக கொடுதது உஙகள உரிமையைப பாழாககிககொளளாதீாகள!! எவன ஒருவன ராஜஜியம நனமைபெற உழைககச சகதிவாயநதவனோ, எவன ஜனஙகளிடததில அநுதாபம மிககு, அவாகள செளககியததிறகுத தககபடி காலாகாலததில தனபுததி சாதுரியததைச செலுததத திறமையுளளவனோ, எவனொருவன, ஒரு கக்ஷிககாரருககாவது, அலலது ஒரு வகை ஜாதியாருககாகவாவது பிரததியேகமாய அநுகூலம செயவதாகசசொலலி வாககுதததம செயயாமல, தான மெமபராய இருககும நாளெலலாம, தான இனனகக்ஷி மெமபா எனறு சொலலிககொளளாமல, ராஜஜியததிலுளள நானாவிதமாயுளள ஜனஙகள யாவருககும தான பிரதிநிதியாகவிருநது, ராஜஜியததிறகு நனமையுணடாககப முயலுவதையே மூலககருததாககொணடு உளளனோ, அவனையே, நீஙகள, உஙகளுககுத தகக மெமபராக எணணி, அவனுககே உஙகள வோடடைக கொடுஙகள இஙகிலாநது, பிரானஸ, ருஷியா தேசஙகளில, அரசாகள, ராஜஜியதநதிர நிபுணாகளைத தளளிவிடடு, தஙகளுககு விசிதமாயுளள மநதிரிமாாகளை ஏறபடுததிககொணடாாகள அதினாலே அவவரசாகள நாசமடைநது, அவா தேசஙகளும சினனாபினனபபடடுப போயவிடடன. நீஙகளும இஙஙனம சரியானபடி மெமபாகளைத தோநதெடுககாமல போனால உஙகளுககும இநதககதிதான விளைநது உஙகள ராஜஜியமும பாழாகிபபோகும ஆகவே, நீஙகள ஸாவ ஜாககிரதையாயிருநது ராஜஜியாநுகூலததிறகுத தகுநதவரைத தோநதெடுகக முயலுஙகள" மேலசொலலிய, இவவாாததைகளையே லணடன மாநகரில பிரசுரமாகும லணடன 'டைமஸ' எனனும பததிரிகை கூறுகினறது இவவாாததைகளையே, உஙகள ராஜஜியம முனனுககு வருவதறகு, உஙகளுககு உறற துணையாகக கொளளுஙகள.

(5) நம்முடைய வாழ்நாளில் நாம் பலருக்கு இணங்கி நடந்து வருவதுபோலவே ராஜாங்கத்தில் பலபல விஷயங்களையும் இணக்கிக் கொண்டுவந்து, ராஜாங்கத்தை நடத்திவரவேண்டும் என்பதை ஒவ்வொரு எல்கட்ரும் ஞாபகத்தில் வைக்கவேண்டும். ராஜ்ஜியத்திலே, நானாவித ஜாதி, மதாச்சார, வர்ணாச்சிரமங்களும், பலபல தொழில் புரிவார்களும் உண்டு. இப்படிப் பலவிதமாய ஜனங்கள் ராஜ்ஜியத்தில் இருந்துவருவதினாலே, அவரவர்கள் நடப்பும் மாதிரியும் வெவ்வேறாகிறது. இப்படிப் பலவகைப்பட்ட ஜனங்களுக்குள் பலவித நடவடிக்கைகளில் விரோதம் ஏற்படாமல், ஜனங்கள் யாவரையும் ஒருங்குபடச் சேர்த்து இணக்கிக்கொண்டு வருதலே ராஜ்ஜிய பரிபாலனம் என்று சொல்லலாகும். இப்படி வேறு பாடாயிருக்கும் நடவடிக்கைகளையெல்லாம் ராஜ்ஜியத்தில் ஜனங்களின் நன்மையைக் கோரி ஒற்றுமைப்படுத்த சமயோசிதமாய் இணக்கிக்கொண்டு வருதல் அத்தியாவசியகம். ராஜ்ஜிய விஷயங்களில் ஜனங்கள் கக்ஷியையெடுத்து வாதிக்கும் ஒரு ஆங்கிலேயர் "ராஜ்ஜிய ஸம்பந்தமாயுள்ள காரியங்கள் ராஜ்ஜியத்தில் பலவகைப்பட்டு, ஒன்றுக்கொன்று மாறுபாடாய் விரோதப்பட்டு, நடப்புகளை மாற்றியிருப்பதெல்லாம் மனுஷியர்கள் சுபாவத்திற்குத் தக்கவாறுதான் இருக்கும். அவைகளை ஒன்றை ஒன்று இணங்கும் விதமாய் ஒருங்குபடச் சேர்த்து, ராஜ்ஜியத்தை நிர்வகித்து வருவதே, ராஜ்ஜிய தந்திரத்தின் அநுபவமாகும். அதுவே ராஜரீகத்தத்துவம்" என்று எழுதியிருக்கின்றனர்.

(6) ஆகையினாலே எல்கடர்கள் தகுந்தபடி யோக்கியமான நபரை மெம்பராகத் தேர்ந்தெடுத்து, சட்டஸபையில் தங்கள் பிரதிநிதியாக அவரை நேமித்துவிட்டபிறகு, அன்னவர் எங்ஙனம் தன் வேலையைச் சட்டஸபையில் நடத்திவருகின்றனர் என்பதை நன்றாய் கவனித்து வரவேண்டும். அம்மெம்பர், சட்டஸபையில் ராஜ்ஜிய விஷயங்களைக் குறித்து வீண்போக்காகக் குற்றங்குறைமட்டும் எடுத்து கூறிவருகிறாரா? அல்லது ராஜ்ஜியத்தில் மேல் நடக்கவேண்டிய நடவடிக்கைகளை முன்னுக்கு வரும்படிச் செய்ய யத்தனப்பட்டு வருகிறாரா? ராஜாங்க விஷயங்களை எல்லாம் சரிவரப்படித்துப்பார்த்து ஜனங்களுக்கு எது சுகாசுகம் என்பதைப் பகுத்தறிந்து, ஜனங்களுடைய நன்மையைக் கோரி ராஜ்ஜியகாரியங்களில் குறைசொல்லி வருகிறாரா? அப்படியன்றி, ராஜீயவிஷய ஞானம் ஒன்றுமில்லாமல் வீண் ஆடம்பரம் செய்து ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களைக் கண்டனம் செய்வதையே தொழிலாக மேற்கொண்டிருக்கின்றனரா? ராஜீயகாரியங்களில் உள்ள குறைகளை பதட்டமின்றி நிதானமாய் அறிவுறுத்தும்படி ஸர்க்காருக்கு விளக்கிக்காட்டி, ராஜ்ஜியம் முன்னுக்கு வரவேண்டிய ஏற்பாடுகளைப் பிரேரேபித்து வருகின்றனரா? ஜனங்கள் யாவரும் தன்னைப்புகழ்ந்து பேசவேண்டுமென்றும், தான் சொல்லும் வார்த்தைகளை ஜனங்கள் கரகோஷம் செய்து தன்னைத் தூக்கிவைக்கவேண்டும் என்கிற வீணாசையுடன் ஜனங்களுக்குப் பிரதிநிதியாய் அவர்கள் கக்ஷியைக் கோரி ஸர்க்காரை எதிர்த்துப் பேசுவதாய் நடிக்கிறாரா? அல்லது சரியான காரணங்களைக்கொண்டு, தான் சொல்லுவதை ருஜுப்படுத்தி, யாவரும் ஒப்புக்கொள்ளும்படி ராஜீய விஷயங்களை எடுத்து விளக்கிக்காட்டி வருகின்றனரா? என்று இத

தியாதி விஷயஙகளை எலகடாகள யாவரும கவனித்துவரவேணடுவது
அவசியம

(7) இநதியாவில அநேகம ஜனஙகளை எலகடாகளாககிச சட
டஸபைககு மெமபாகளை வோட மூலமாயத தோநதெடுககுமபடி
அவாகளுககு உரிமை வாயநது, பிரதிநிதிகள மூலமாய தஙகள
ராஜஜியததை தாஙகளே பரிபாலிததுவருமபடிககுள்ள எறபாடுகள
இநதிய நூதன ஆகடால உணடாயிருபபது பெருததலாபம ஜனங
களே ராஜாஙகம நடததிவருதல, அதாவது குடி அரசு எனபது இநதி
யாவில எறபடுவதறகு இநத ஆகடே ஸாதனம ஜனஙகளே அரசுபுரி
தல எனறு சொலலுவதினாலே, ஜனஙகள தஙகள ராஜஜியததை ஆளு
மபிபிததம தஙகளுககுளளிருநது பிரதிநிதிகளை எறபடுததிககொணடு
ஆணடுவரும அதிகாரம ஜனஙகளுககுக கிடைததிருககிறது எனறு
அறியவேணடும ஜனஙகள எனறு பிரயோகிபபதனாலே, பணம
ஏராளமாய நிறைநதுளள நிலததிறகுடையவாகள, பெருதத வியா
பாரிகள, படிபபுமேலிடட வகுபபினா, உயாகுலததைச சோநத
பிராமமணாகள ஆகிய இவாகளதான அரசுபுரியும அதிகாரம வாய
நத ஜனஙகள எனறு எணணிவிடாமல, கிராமஙகளில உளள குடி
யானவாகளும, படடணஙகளில கூலிவேலை செயபவாகளும, கீழப
படட பஞசமா முதலிய ஜாதியாாகளும கூடததான ராஜஜிய விஷ
யமாய கவனிககககூடிய ஜனஙகள எனறு எணணி இதுவரையிலும
எநதெநத ஜனஙகள ஜாதி மதாச சாரஙகளில தாழவுபடடு ஜனஙக
ளால அவமதிககபபடடும, ராஜீய விஷயஙகளில அஞஞானிகளாயும
இருநது வநதனரோ அநத ஜனஙகளும கூட இனிமேல ராஜஜிய
விஷயஙகளில எலகடாகளாக இருநது ராஜஜியம நடததிவரப
போகினறனா எனறு நினைககவேணடும இதுதான இநதியாவில
ஸாவஜனஙகளுமாயச சோநது, இநதிய அரசாக்ஷியை இனிமேல
நடததிவருமபடிககுள்ள அநதரஙகம இதுவே இநதியருககு பெறும
பேறு மிகத தாழநத ஜனஙகள எனறும, உலக நடவடிககை தெரி
யாத பாமராகள எனறும, ராஜீய விஷயாதிகளில கொஞசமே
னும பறறிலலாத அஞஞானிகள எனறும, சொலலிவநத ஜனஙகளு
ககு எலலாம இநதிய புதிய ஆகடினபடி வோடடுகளை எறபடடு
தஙகள வோடடின மூலமாய பிரதிநிதிகளைத தோநதெடுதது ராஜ
ஜிய பரிபாலனம செயதுவர அதிகாரம கிடைததிருககிறது ஆகை
யினாலேதான, இனிமேல இநதியாவில எறபடும அரசாக்ஷி இநதி
யக குடிகளாலே நடததிவரும அரசாக்ஷி எனறும, இநதிய நூதன
ஆகடடும, குடியரசாக்ஷிககாக எறபடுததபபடட ஆகடு எனறும
எறபடுகிறது ஆகவே, இதுகாறும ராஜீய விஷயஙகளை கவனிககப
போதுமான யோககியததை யுளளவாகள இலலையெனறு தாழவாய
மதிககபபடடிருநத இநதியாகள யாவரும, இனிமேல ஊககமடைந
து, தஙகள ராஜஜியததை நனகு பரிபாலிததுவர தஙகளுககுளள
வோடடுரிமைகளைச சரியானபடி செலுததி வரவேணடும வீண
ஆடமபரம செயது, எலகடாகளுககு ஹிதவாாததைகளைச சொலலி
ஆசைகாடடி மோசமபணண நினைககும, நனனடததையறற நபா
களை மின பின ஆலோஜிககாமல சடடநிரமாண ஸபைகளுககு
மெமபராக வருமபடி எலகடாகள தஙகள வோடடைக கொடா
மலிருககவேணடும. பூாவகாலததில கிரீஸ ரோம எனகிற தேச

ஙகளில ஜனஙகளே ராஜஜிய பரிபாலனம செயதுவநதனா. அவாகள தஙகள ராஜஜியததை பரிபாலிததுவர யோககியமாயுள்ள பிரதிநிதிகளைத தோநதெடுககாததினால, அவவிராசசியஙகளில குடிகளாலே நடததபபடடுவநத அரசாக்ஷி அடியோடு மாணடு போய அநத ஸதானததில கொடுஙகோல அரசு வியாபிககலாய ஜனஙகளுககு ஹிமசை ஏறபடடுவிடடது எனனாலல, அநத தேசஙகளிலுள்ள ஜனஙகள தஙகள வோடடு உரிமைகளைச சரியா னபடி உபயோகிககாமல, வீணபேசசுபபேசி, ஜனஙகள மனதைக கவாநது ஆசை வாாததைகள காடடிய அயோககியாகளைப பிரதி நிதிகளாக நியமிததுவிடடாாகள இபபடி கிரீஸதேசமும ரோமா புரியும பாழடைநது நசிததது போல, உஙகள ராஜஜியததிலும அஙஙனம நடவாமலிருகக வேணடும சடடஸபைககு மெமபரா வர எணணும ஒவவொரு நபரும, ஜனஙகளுடைய உரிமைகளைப பாது காககவும, அவாகள கஷட நிஷடூரஙகளைப போககவும தான மெமப ராக இருநது பாடுபடடபோகிறவன என்று சொலலி எலகடாகளை வோடடுக கேடபது உலகததில ஸகஜமே அபபோடபபடட நபரை ஜனஙகள விருமபி, அவருககு வோடடு கொடுகக நினைபபதும ஸாதாரணம தான ஆனால ஒவவொரு வோடடரும, வோடடுகொடுக கு முன இநதமாதிரிச சொலலிவருபவா வாஸதவமாய ஜனஙகளு ககுப பாடுபடககூடியவாதானா? அவா பேசுவது தான மெமபராக வருவதறகு மாததிரமதானா பிரயோஜனம? அலலது அவா ஜனஙக ளிடததில அநதரஙக விசுவாஸம மேலிடடு, உணமையாகவே ஜனங களுடைய சௌகரியததையும நனமையையும நாடி, தனனுடைய ஸவப பிரயோசனததை கவனியாமலிருபபவரா? ஜனஙகள தபபு செயதுவிடடாலும, நீஙகள செயதது சரியலல என்று பயபபடா மல வெளியிடடுச சொலல தைரியவானாயிருநது உணமையே பேசும குணமுளளவரா? தனககே தான சொலலுவது சரிதான எனகிற திட புததி வாயநது அதை ஜனஙகளுககு ஒளிககாமல தைரியமாயச சொலலும திறமையரா? எனகிற இவவிஷயஙகளை தீவிரமாய கவ னிககவேணடும இநதிய எலகடாகள யாவரும கீழவரும உதாரண பூாவமாயுள்ள விஷயததை நனகு மனதில திடமாய வைதது கொளளவேணடும 60 ஆணடுகளுககு முனபு ஜான ஸடுவாடமில எனகிற துரை இஙகிலாநதில பாாலிமெணடு மகா ஸபைககு மெமபராகவர முயனறனா இஙகிலாநதில வேலை செயது பிழைக கும கூலியாடகளாகிற ஏழைகளிடததில அவருககு வெகு பிரீதி அவாகள சௌகரியததைப பறறியே பிரததியேகமாய அடிக கடி எழுதியும பகிரஙகமாயப பேசியும உளளவா அககூலிவேலை செயபவாகளைப பாாதது, அவாகள செயயும காரியஙகள இன னினனது தபபு என்று அவாகள குறறஙகுறைகளை ஒளிககாமல தைரியமாயச சொலலி, அவாகள பொயககூடப பேசுகிறாரகள என்று பகிரஙகமாயச சொனனா அதினாலே அவவேலையாடகளுககு அவரி டம குரோதம உணடாகிவிடடது தனககு பாாலிமெணடில மெமப ராகவர இஷடமிருபபதை வெளிககாடடி ஒரு பெரிய ஸபைகூடடிப பேசி, அவாகளுடைய வோடடைத தனககுக கொடுககும்படிக கேட டபோது, வேலையாடகள கோபாவேசததால அவரைபபாாதது, "நீரதான எஙகளைப பொயயாகள என்று பேசியிருககிறீரே? இப

பொழுது அபபடிப பொயபேசும எஙகளுடைய வோட்டுககளை எனவேணடுகிறீா", எனறுககேடடதும, மில துரை "எனககு எது மெய எனறு தோனறுகிறதோ அதை உஙகளுககுச சொலல நான என அஞைரியபபடவேணடும? வேலையாடகள பொயயாகள எனறு நான சொலலியிருபபது வாஸதவமதான இபபொழுதுமகூட அவா களைபபறறிப பொயயாகள எனறே எணணியிருககிறேன , உஙகளுடைய வோடடை எனககுக கொடுபபதறகாக வேணடி உஙகளை நான இபபொழுது ஸதுததியம செயயத தயாராக இலலை உஙகள பிசசுககளை எடுதது உஙகளுககுக காடடி, என நணபாகளாகிய உஙகளை முனனுககுககொணடுவருவது என கருததே ஒழிய, உஙகள கணணுககுப பகடடாயப பேசும சுபாவம எனககுககிடையாது" எனறு வெகு தைரியமாயப பதில உரைததுவிடடனா அமமாதிரி அஞசாமல தனமனதில உளளதை மனபபூணமாய மிலதுரை வெளியிடடதை நோககி ஜனஙகளுககு அவரிடததில பிரீதி உணடாகி, அவருககே தஙகள வோடடுககளைககொடுதது தஙகள பிரதிநிதியாய அவரை பாாலிமெணடு மெமபராக நியமிததனா. "யாவனொருவன ஜனஙகளுடைய அவிசுவாஸததையும அடையததயாராக இலலையோ அதாவது ஜனஙகள தூஷணைககுபபயபபடாமல அநதரஙக சுததியாய தன காரியததைப பாாககச சகதியறறவனோ, அவனே ராஜஜியததை வாஸதவமாயச சரியானபடி ஆளததிறமை யறறவன" எனபதை நனறாய மனதில கிரகிககவேணடும ஆகவே நூதனச சீாதிருததஙகளால இநதியாவுககு நனமை உணடாகக வேணடும எனறு கோறி, சீககிரததில இநதியாகளுககு ஸவராஜஜியாதிபததியம பூராவாககிடைதது, ராஜஜியமும அபிவிருததி அடைநது ஜனஙகளுககு சௌகாயம மேலிடவேணடுமெனறு நினைககும இநதியாவிலுளள எலலா எலகடாகளும, இபபோது மில துரையைப பறறி சொலலிமுடிதத விருததாநதததை நனறாய மனதில உடகொணடு, இநதியாவின நனமைககாகத தகுநதபடி தஙகள வோட்டுரிமைகளை பரிபாலிததுவரவேணடுவது பிரதானமான காரியமாகும

MADRAS PRINTED BY THE SUPERINTENDENT, GOVERNMENT PRESS,